ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



வடுகநம்பி இயற்றிய

# ஸ்ரீ யதிராஜ வைபவம்

(பிங்கள ஸம்வத்ஸர மலர்)

தமிழ் விவரணம் :-

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி**

(ஆசிரியர்: ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்)

கிடைக்குமிடம் :-

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,

*3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.*

ஸ்ரீ ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது.

டிரஸ்டிகள்:-

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L. அட்வகேட்.
S. ராம அய்யங்கார், B.Sc.B.L. அட்வகேட்.

விலை ரூ. 1-00. 1976. தபால் 25 பை.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

# யதிராஜ வைப₄வம் — முன்னுரை

[ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
ஸுதர்ஶனம் ஆசிரியர், 3, புத்தூர் அக்₃ரஹாரம், திருச்சி-17.]

விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீ வைஷ்ணவ த₃ர்ஶந ஸ்த₂ாபகரான எம்பெருமானாருடைய சரித்திரத்தை விளக்கும் பற்பல நூல்களில் தலைமைபெற்றது 'யதிராஜ வைப₄வம்' என்னும் இந்நூல். 114 அழகிய ஶ்லோகங்களில் அமைந்த இந்நூலை அருளியவர் எம்பெருமானாரிடம் சரமபர்வநிஷ்டை₂யை உடைய சிஷ்யரான ஆந்த்₄ரபூர்ணர் எனப்படும் வடுகநம்பியாவர். இந்நூலில் 113-வது ஶ்லோகத்தில் இது தெளிவாக விளங்குகிறது. சுருக்கமான இந்நூலை விவரிப்பவையாகவே ப்ரபந்நாம்ருதம், கு₃ருபரம்பராப்ரப₄ாவம் முதலான நூல்கள் அமைந்திருக்கின்றன.

இந்நூலை அருளிய வடுகநம்பியின் ஆசார்யநிஷ்டை₂ அதி விலக்ஷணமானது. எம்பெருமானாரின் திருவடிநிலைகள் (பாது₃கைகள்) மாத்திரமே இவருக்குத் திருவாராத₄னப்பெருமாள். ஒருசமயம், இவர் தம் திருவாராத₄னப்பெருமாளான உடையவர் திருவடி நிலைகளையும், உடையவர் திருவாராத₄னப் பெருமாளையும் ஒன்றாக எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்தார். உடையவர் "வடுகா! இப்படிச் செய்து விட்டாயே!" என்று வருத்தப்பட்டார். அதற்கு வடுகநம்பி 'உங்கள் பெருமாளைக்காட்டிலும், எங்கள் பெருமாளுக்கு என்ன குறை?', என்று அருளிச்செய்தாராம். பெருமாளுடைய வடிவழகை உடையவர் ஸேவித்துக்கொண்டிருக்கும்போது, உடையவருடைய வடிவழகை இவர் ஸேவித்துக்கொண்டிருப்பராம். ஒருநாள் 'பெரியபெருமாளுடைய திருக்கண்ணழகைப் பாராய்' என்று உடையவர் அருளிச்செய்ய, "என்னமுதினைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!" என்று நம்பி அருளிச்செய்தாராம். உடையவரும் 'இப்படியொரு நிஷ்டை₂யா!' என்று உகந்து, நம்பியைப் பூர்ணகடாக்ஷம் செய்தருளினாராம. எம்பெருமானார் தாம் அமுது செய்தருளிய ஶேஷ ப்ரஸாத₃ம் ப்ரஸாதி₃க்கும் போது, இரண்டு திருக்கைகளாலும் ஏற்றுக்கொண்டு, ப்ரஸாத₃ஸ்வீகாரம் பண்ணி, தம் தலையிலே திருக்கைகளைத் துடைத்துக்கொள்வாராம் வடுகநம்பி; ஒருநாள் இதைக்கண்டு எம்பெருமானார் மிகவும் கோபிக்க,

அன்று திருக்கை விளக்கிவிட்டு,மறுநாள் உடையவர் ப4க3வத்ப்ரஸாத3த்தைக் கோயிலிலே ப்ரஸாதி3க்க, அதை அமுதுசெய்தபின் திருக்கை விளக்கினாராம் வடுகநம்பி; உடையவர் இதுகண்டு 'வடுகா! என்செய்தாய்!' என்ன, வடுகநம்பி "நேற்று அருளிச்செய்தபடி செய்தேன்" என்ன, உடையவரும 'உமக்குத் தோற்றோம்' என்று அருளினாராம்.

ஒருநாள் பெருமாள் திருவீதி எழுந்தருளும்போது, 'வடுகா! பெருமாளை ஸேவிக்கவா" என்று உடையவர் அழைக்க, அப்போது உடையவருக்குப் பால்காய்ச்சிக் கொண்டிருந்த வடுகநம்பி, "உம்முடைய பெருமாளை ஸேவிக்கவந்தால், என்னுடைய பெருமாளுக்குப் பால் பொங்கிப்போமே" என்று அருளினார் என்னும் விஷயம் ஸுப்ரஸித்3த4ம். வைஷ்ணவரல்லாத தம்முடைய உறவினர்கள் சிலர் வந்து இவரகத்திலே தங்கிப்போக, அவர்கள் சென்றவுடன், அகத்தையெல்லாம் சுத்திபண்ணி, அவர்கள் தொட்ட பா4ண்ட3ங்களையும் உடைத்துப்போட்டு, அவர்கள் வந்து இருந்ததற்கு ப்ராயஶ்சித்தமாக முதலியாண்டானகத்தில் புழைக்கடையில் கழித்துக்கிடந்த பா4ண்ட3ங்களை எடுத்துவந்து தம்மகத்தில் உபயோக3ப்படுத்தினார் என்பதும் பிரஸித்3த4ம். உடையவர் ஸ்ரீ பாத3தீர்த2ம் தவிர வேறு ஸ்ரீபாத3தீர்த்த2ம் கொள்வதில்லை என்னும் நியதியும் இவருக்கு உண்டு. இத்தகைய ஆசார்யநிஷ்டை2யாலேயே, இவர் ஆழ்வானையும், ஆண்டானையும 'இருகரையர்' என்று அருளிச்செய்வர் என்பது ஸ்ரீவசநபூ4ஷண ஸூத்ரஸித்3த4ம்.

இவ்வண்ணமாக எம்பெருமானாரைத்தவிரத் தேவுமற்றறியாதிருந்த இம்மஹாசார்யர் எம்பெருமானாரது வைப4வபரமான இந்நூல் ஒன்றையே அருளிச்செய்துள்ளார். இதை ஆஸ்திகவுலகம் முழுவதும், குறிப்பாக ஸ்ரீவைஷ்ணவவுலகமும் படித்துப் பயன்பெறும் என நம்புகிறோம்.

நள-ஸூ
ஐப்பசியில்
திருவாதிரை
11—11—1976

தாஸன்,
**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
'ஸுதர்சனம்' ஆசிரியர்.

---

**காதி அநந்தாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீ வைஷ்ணவ க்3ரந்த2மாலா (எண் 1) இப்பதிப்புக்கு மூலம். இதைக்கொடுத்துதவியர்:- ஹரிகதைவல்லுநர் எம்பார் விஜயராக4வாசார்ய ஸ்வாமி.**

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:






வடுகநம்பி இயற்றிய

# ஸ்ரீ யதிராஜ வைப4வம்

[ ‘ஸுதர்சனம்’ ஆசிரியர் இயற்றிய தமிழ் விவரணத்துடன் கூடியது. ]

## இரு திருமணங்கள்

**श्रीमद्यामुनदेशिकादधिगतश्रुत्यन्तयुग्माशयः**
**तत्सन्देशचिकीर्षया नियतधीः श्रीशैलपूर्णो गुरुः।**
**अन्विष्यन् अनुजाद्वयोचितवरौ श्रीवेङ्कटाद्रौ हरेः**
**तीर्थं पुष्पमपीतराण्युपहरन्नास्ते स सद्वृद्धये ॥ १ ॥**

1. ஸ்ரீமத்3யாமுநாசார்யரிடமிருந்து உப4யவேதா3ந்தங்களின் கருத்தை அறியப்பெற்றவராய், (ப4விஷ்யதா3சார்யரைக் கண்டுபிடித்து, தா3ர்ஶனப்ரசாரத்தை அவரிடம் ஒப்பிக்கவேண்டும் எனும்) அவருடைய ஆஜ்ஞையை நிறைவேற்றவேண்டும் என்னும் ஒரே குறிக்கோளை உடையவராய், தமது இரு ஸஹோத3ரிகளுக்கும் தகுந்த வரன்களைத் தேடுகின்றவராய், திருவேங்கடமுடையானுக்குத் தீர்த்த2ம், புஷ்பம் முதலான திருவாராத4னத்திற்கு உறுப்பான உபஹாரங்களை ஸமர்ப்பித்துக்கொண்டு, திருமலையிலே திருமலைநம்பி என்னும் ஆசார்யர் வாழ்ந்துவந்தார்.

**तत्रान्तरे मधुरमङ्गलभूतपुर्योर्नित्यस्थिती श्रुतितदङ्गविदौ कुलीनौ।**
**द्वावम्बुरुण्णयन केशवसोमयाजिनामान्वितावभजतां परिणेतुकामौ ॥ २ ॥**

2. இவ்வாறிருக்கையில், நற்குடிப்பிறந்தவர்களாய், வேத₃வேத₃ாங்க₃ங்கள் கற்றவர்களான — மது₄ரமங்க₃லத்தில நித்யவாஸம் செய்யும் கமலநயனப₄ட்டரும், ஸ்ரீபெரும்பூதூரில் நித்யவாஸம் செய்யும் கேஶவ ஸோமயாஜியும் அவ்விரு ஸஹோத₃ரிகளில் ஒவ்வொருத்தியை மணம் புரியவிரும்பி, திருமலை நம்பியிடம் வந்தார்கள்.

श्रीशैलपूर्णस्स समीक्ष्य वर्यौ वरौ विनिश्चित्य च तौ प्रहृष्टः।
तत्प्रार्थितश्शङ्खरथाङ्गचिह्नमन्त्रप्रदोऽभून्नतयोस्तयोश्च ॥ ३ ॥

3. தமது திருவடிகளில் வணங்கிப் பிரார்த்தி₂க்கப்பட்ட திருமலை நம்பி, மிகவுகந்தவராய், அவ்விருவரையும் தக்க வரன்களாக நிஶ்சயித்து, ஶங்க₂சக்ரத₄ாரணம், மந்த்ரோபதே₃ஶம் முதலான பஞ்சஸம்ஸ்காரங்களை அவர்களுக்குச் செய்துவைத்தார்.

तामग्रहीदग्रजभूमिदेवीं हृष्यन्मनाः केशवसोमयाजी।
तां चानुजातां कमलाक्षभट्टः श्रीदेविकां तौ च तुतोष पूर्णः ॥ ४ ॥

4. கேஶவஸோமயாஜியானவர் அந்த ஸஹோத₃ரிகளில் மூத்தவளான பூ₄மிதே₃வியை மிகவுகந்து மணம் புரிந்துகொண்டார். அவ்வண்ணமே இளையவளான ஸ்ரீ தே₃வியைக் கமலநயனப₄ட்டர் மணம் புரிந்துகொண்டார். இத்திருமணங்களாலே திருமலைநம்பியும் அவ்விரு மணவாளப்பிள்ளைகளும் ஆநந்த₃மடைந்தனர்.

ततस्सभार्यौ तदनुज्ञया तौ स्वं वासमागम्य चिरं सुशीलौ।
श्रीशं समाराध्य तदीयभक्तौ सह प्रियाभ्यां मुदितावभूताम् ॥ ५ ॥

5. அதன்பிறகு, திருமலைநம்பியின் அனுமதிபெற்று, மனைவியரோடு கூடிய அவ்விருவரும் தத்தம் ஊருக்குச்சென்று, நல்லொழுக்கம் உடையவர்களாய், ஸ்ரிய:பதியை ஆராதி₄ப்பவர்களாய், அவனடியார்களிடம் அன்பு பூண்டவர்களாய், மனைவியரோடு நெடுங்காலம் இன்புற்று வாழ்ந்துவந்தனர்.

## ஸ்ரீராமாநுஜர் அவதாரம்

ततो जगन्मङ्गलपिङ्गलाब्दे चैत्रार्यशुक्लच्छदपञ्चमीके ।
आर्द्राभिधर्क्षेण युते च वारे बृहस्पतेस्सन्मृगराजलग्ने ॥ ६ ॥

वेदान्तसिद्धान्तसमर्थनाय बाह्यान्तरभ्रान्तमतापनुत्त्यै ।
शेषांशकः केशवयज्वदेव्यां तेजोनिधिः कश्चिदिहाविरासीत् ॥ ७ ॥

6, 7. அதன்பிறகு, உலகிற்கே மங்க₃ளமளிக்கும் பிங்க₃ள வருஷத்தில், சிறப்புற்ற சித்திரை மாஸத்தில், ஶுக்லபக்ஷத்தில் பஞ்சமி திதியில் திருவாதிரை நக்ஷத்திரத்தோடு கூடிய வியாழக்கிழமையன்று நன்மைமிக்க ஸிம்ஹலக்₃னத்தில், மறைமுடிகளின் முடிவை நிலைநாட்டுவதற்காகவும், வேத₃த்திற்குப் புறம்பான பா₃ஹ்யமதங்களும், வேத₃த்திற்கு அவப்பொருள் சொல்லும் குத்₃ருஷ்டிமதங்களும் அழிவதற்காகவும் கேஶவஸோமயாஜியின் மனைவியான பூ₄தே₃வியிடம் ஆதிஶேஷாம்ஶத்தை உடையவராய், ஒளிமிகுந்த ஒரு மஹாபுருஷர் அவதரித்தார்.

श्रीशैलपूर्णोऽप्यथ भूतपुर्यामागम्य वीक्ष्याद्भुतभागिनेयम् ।
चकार रक्षार्थरथाङ्गशङ्खचिह्नं च रामानुजनामकं च ॥ ८ ॥

8. திருமலைநம்பியும் ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளி, அற்புதனான மருமகனைக் கடாக்ஷித்து, அவரது ரக்ஷையின்பொருட்டு ஶங்க₂ம் சக்ரம் முதலான பஞ்சாயுத₄ங்கள்கொண்ட ஐம்படைத்தாலியை அணிவித்து, ராமாநுஜன் என்னும் திருநாமத்தையும் இட்டருளினார்.

## உபநயனமிருன ஸம்ஸ்காரங்கள்

ततोऽभिवृद्धस्य च तत्कटाक्षैः पितापि तस्यात्मभुवोऽब्दपूर्तिम् ।
चौलं तथाऽऽरम्भणमक्षराणां चकार सत्त्वोत्तरपञ्चमाब्दे ॥ ९ ॥

9. திருமலைநம்பியின் கடாக்ஷங்களாலே வளர்ந்த அக்குமாரனுக்கு அப்₃த₃பூர்த்தியையும், (ஶிகை₂வைத்தலாகிற) சௌளத்தையும், ஸத்வகு₃ணம் மிகுந்த ஐந்தாம் வயஸ்ஸில் அக்ஷராப்₄யாஸத்தையும் தந்தையான கேஶவஸோமயாஜி செய்தருளினார்.

कृतोपनीतिस्तु ततस्स्वपित्रा समभ्यसन् वेदतदङ्गशास्त्रम्।
रामानुजार्योऽभवदग्र्यतेजा महर्धिरानन्दितसत्यशीलः ॥ १० ॥

10. தமது தந்தையாலே உபநயனம் செய்விக்கப்பெற்ற ஸ்ரீராமாநுஜரும், வேத₃வேதா₃ங்க₃ ஶாஸ்த்ரங்களைக் கற்கின்றவராய் சிறந்த ப்₃ரஹ்மதேஜஸ்ஸையும், மிகுந்த பெருமைகளையும், இன்புறும் நல்லொழுக்கங்களையும் உடையவராக இருந்தார்.

## விவாஹம்

ततस्तु काञ्चित् परिणीय कन्यां गृहस्थधर्मस्थितिराप काञ्च्याम्।
स पूर्वपक्षाभ्यसनाय मायिसंन्यासिनं यादवसम्प्रकाशम् ॥ ११ ॥

11. அதற்குப்பின், ஒரு கன்னியை மணம்புரிந்து இல்லறம் மேற்கொண்டவராய், பூர்வபக்ஷஶாஸ்த்ரங்கள் வாசிப்பதற்காகக் காஞ்சியில் வாழ்ந்த மாயாவாதி₃ (அத்₃வைதி) ஸங்யாஸியான யாத₃வப்ரகாஶரை அடைந்தார்.

## ஶ்ருத்யர்த்த₂த்தைத் தெளிவு படுத்தல்

ततः कदाचिद्धुरि यादवेन "सर्वं खलु"श्रुत्यविशारदेन।
अपार्थ उक्ते स यथार्थमुक्त्वा रामानुजोऽदर्शयदर्थसारम् ॥ १२ ॥

12. ஒருநாள் யாத₃வர் "ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம" [ச₂ாந் 3-14-1] [இவ்வுலகனைத்தும் ப்₃ரஹ்மமே] என்னும் வேத₃வாக்யத்திற்குப் பொருள் கூறுகையில், அதன் பொருளை உணராத யாத₃வர் அவப்பொருள் உரைத்தவுடன், ராமாநுஜர் உண்மைப் பொருளைக்கூறி, வேதா₃ர்த்த₂ ஸாரத்தை அவருக்கு அறிவுறுத்தினார்.

## ஆளவந்தார் கடாக்ஷித்தல்

श्रीरङ्गवासी स तु यामुनार्यो निशम्य रामानुजदर्शितार्थम्।
आगम्य काञ्च्यां वरदं महात्मा देव्या युतं प्राणमदन्तरङ्गैः ॥ १३ ॥

13. ஶ்ரீரங்க₃த்தில் வாழ்ந்த யாமுநாசார்யர் எனும் மஹா புருஷரான ஆளவந்தார், ராமாநுஜர் காட்டிய அவ்வேதப் பொருளைக் கேள்வியுற்று, அந்தரங்க₃ஶிஷ்யர்களோடு கூடக் காஞ்சிக்கு எழுந்தருளி, பெருந்தேவித்தாயாரோடு கூடிய பேரருளாளனை வணங்கினார்.

ततस्स शिष्यावृतयादवं तं रामानुजं मध्यगतं च भान्तम्।
समीक्ष्य रामानुजशिष्य एष चेद्यादवो युक्तमितीव दध्यौ ॥ १४ ॥

14. அதன் பிறகு, ஶிஷ்யர்களால் சூழப்பெற்ற யாத₃வரையும், அவர்களிடையே ஒளிவீசும் ராமாநுஜரையும் கண்டு, "இந்த யாத₃வர் ராமாநுஜருக்கு ஶிஷ்யராயிருக்கவே தக்கவர்" என்று திருவுள்ளம் பற்றினார் ஆளவந்தார்.

श्रीवैष्णवर्द्ध्यर्थमतीव भक्त्या तस्य प्रसीदेति स यामुनार्यः।
भान्तं महादेविकया शरण्यं श्रीदेवराजं शरणं प्रपन्नः ॥ १५ ॥

15. "ஶ்ரீவைஷ்ணவர்கள் பல்கிப்பெருகுவதற்காக ராமாநுஜரைக் கடாக்ஷிப்பீர்" என்று மிகுந்த ப₄க்தியுடன், பெருந்தேவியோடு கூடிய ஶரண்யனை தேவப்பெருமாளை ஶரணமடைந்தார் யாமுநாசார்யர்.

सम्भाषितश्चेदिह पाठभङ्गः स्यादित्यसम्भाष्य स यामुनार्यः।
श्रीरङ्गमेवाप सशिष्यवर्गो रामानुजार्यश्च पपाठ पश्चात् ॥ १६ ॥

16. "இப்போது நாம் ராமாநுஜரோடு வார்த்தையாடினால், அவர் பாடம் படிப்பதற்கு இடையூறு ஏற்படும்" என்று கருதிய ஆளவந்தார், அவரோடு வார்த்தை சொல்லாமலே ஶிஷ்யவர்க்க₃ங்களோடு கூட ஶ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளிவிட்டார். ராமாநுஜரும் யாத₃வரிடம் பாடம் படித்துவந்தார்.

## பிஶாசமோட்டுதல்

तद्देशभूपस्य सुते पिशाचग्रस्तेऽन्यमन्त्रैरखिलैरसाध्ये।
भूपस्तदा यादवमन्त्रमोच्य इत्येवमाकर्ण्य तमानिनाय ॥ १७ ॥

17. அந்த நாட்டு அரசனுடைய பிள்ளை பிஶாசத்தால் பிடிக்கப் பட்டு, எவர் செய்யும் மந்திரத்திற்கும் கட்டுப்படாதிருந்தவளவில், அரசன் 'இப்பிஶாசம் யாத₃வருடைய மந்திரத்தாலே விரட்டப்படும்' என்று செவியுற்று, யாத₃வரை வரவழைத்தான்.

**दृष्ट्वाऽन्तरङ्गावृतयादवं तं स्मित्वा पिशाचः परिभाव्य भूरि।**
**रामानुजार्यं शरणं प्रपद्य राजात्मजं स्वं च जहौ महाघम्॥ १८॥**

18. அந்தரங்க₃ஶிஷ்யர்களோடு கூடிய யாத₃வனைக்கண்டு சிரித்து, அவனை மிகவும் அவமானப்படுத்தி, பிஶாசமானது ராமாநுஜரை ஶரணமடைந்து, அரசனின் பிள்ளையையும், தனது பெரும்பாவத்தையும் ஒருங்கே விட்டது.

**तद्वृत्तमत्यद्भुतमीक्ष्य भूपो रामानुजार्येऽकृत सन्मतिं सः।**
**तेनार्पितं तद्गुरुयादवाय सन्मानमत्यन्तविनीतिपूर्वम्॥ १९॥**

19. அத்யத்₃பு₄தமான அச்செய்தியைக் கண்ட அரசன் ராமாநுஜ ருக்கு விஶேஷமாகப் பரிசளித்தான். ராமாநுஜரும் தனது ஆசார்ய ரான யாத₃வரிடம் அந்தப் பரிசை மிகுந்த அடக்கத்தோடு கொடுத்தார்.

## யாத₃வரின் பொறுமை

**गत्वा स काञ्चीमथ यादवोऽपि रामानुजे प्रीत इवान्तरेर्ष्यः।**
**तदादि तन्मानसशोधनेच्छुः वेदान्तवाक्यार्थविचारकोऽभूत्॥ २०॥**

20. அதற்குப்பின் காஞ்சியை அடைந்த யாதவரும் ராமாநுஜ ரிடம் ப்ரீதியுடையவர்போலிருந்துகொண்டு, நெஞ்சில் பொறுமை யுடையவராய், அது முதற்கொண்டு அவரது கருத்தைப் பரீக்ஷிப்பதில் நாட்டம் கொண்டவராய், அவரோடு வேதா₃ந்தவாக்யார்த்த₂ விசாரங் களைச் செய்துவந்தார்.

## கப்யாஸஶ்ருதிக்குப் பொருளுரைத்தல்

**कप्यासशब्दस्य वदत्यपार्थं तस्मिन् तदभ्यङ्गकृतः कदाचित्।**
**रामानुजस्याश्रु तदूरुदाहि दृष्ट्वाशु सोऽप्युन्मुखसम्भ्रमोऽभूत्॥ २१॥**

21. ஒருசமயம் — "கப்யாஸம் பூண்ட₃ரீகம் ஏவமக்ஷிணீ" என்று பரமாத்மாவின் திருக்கண்களை வர்ணிக்கும் சா₂ந்தோ₃க்₃ய வாக்யத்திற்கு, "குரங்கின் ஆஸனவாய்போல் சிவந்த தாமரைபோன்ற கண்களை உடையவன் பரமபுருஷன்" என்று யாத₃வர் அவப்பொருள் கூறுகையில், யாத₃வருக்கு எண்ணெய் தேய்த்துக்கொண்டிருந்த ராமாநுஜரின் துன்பக்கண்ணீர் விழுந்து யாதவரின் தொடையைச் சுட்டது. அதைக்கண்ட யாத₃வர் நிமிர்ந்து பார்த்துப் பரபரப்படைந்தார்.

**इदं किमित्युक्तवतेऽथ तस्मै कप्यासवाक्यस्य यथार्थमुक्त्वा।**
**जैमिन्युपाख्यानमपि ब्रुवन्तं रामानुजं नात्र पठेत्यवोचत्॥ २२॥**

22. "கண்ணீர் வருவது எதனாலே?" என்று கேட்ட யாத₃வருக்கு, "'ஸூர்யனால் மலர்ந்த (அல்லது பருத்த தண்டை உடைய, அல்லது ஆழமான நீரில் முளைத்த) தாமரை போன்ற கண்ணையுடையவன் பரமபுருஷன்' என்ற அழகான பொருள்களிருக்க, குரங்கின் ஆஸந வாயாகிற நிஹீந (தாழ்ந்த) த்₃ருஷ்டாந்தம் சொன்னதாலே வருந்திக் கண்ணீர் விட்டேன்" என்று சொல்லி, ஜைமிந்யுபாக்₂யானத்தையும் கூறிய ராமாநுஜரை, "நீ இனி இங்கே படிக்கவேண்டாம்" என்று உரைத்தார் யாத₃வர்.

## யாதவரின் சதி

**ततस्समालोच्य सहान्तरङ्गैः प्रलोभ्य रामानुजमप्युपायैः।**
**स जाह्नवीस्नाननिमित्तयात्राव्याजेन हन्तुं कुमतिः प्रतस्थे॥ २३॥**

23. அதன்பிறகு, து₃ஷ்டபு₃த்₃தி₄யையுடைய யாத₃வர், அந்தரங்கு₃ர்களோடு கூடிச் சதியாலோசனை செய்து, ராமாநுஜரையும் தந்திரோபாயங்களாலே மயக்கி, க₃ங்கா₃ஸ்நானத்தின் பொருட்டுக் காஶியாத்திரை செய்யும் வியாஜத்தையிட்டு அவரையும் அழைத்துக் கொண்டு, அவரைக் கொலை செய்வதற்காகப் புறப்பட்டார்.

**गोविन्दभट्टश्च सुतोऽथ मातृष्वसुः सुशीलस्सहपाठि मित्रम्।**
**मध्येवनं प्रोच्य स दुष्टचिन्तां रामानुजाय स्वयमन्वगात् तम्॥ २४॥**

24. நல்லொழுக்கமுடையவராய், ராமாநுஜரோடு கூடப்படித்து வந்த நண்பராய், அவருடைய சிறிய தாயாரான ஸ்ரீதேவியின் பிள்ளையான கோ₃விந்த₃ப₄ட்டரும், யாத₃வருடைய கெட்ட எண்ணத்தை நடுக்காட்டில் ராமாநுஜருக்கு அறிவித்து அவரை நிறுத்தி, தான் யாத்திரை செய்யும் யாத₃வரோடு தொடர்ந்து சென்றார்.

## பெருந்தேவி நாயகனின் கருணை

**महाटवीमध्यगतस्स रात्रौ रामानुजोऽचिन्तयदार्तचेताः।**
**देव्या महत्या सह भासमानं दीनावनं तं वरदं शरण्यम्॥२५॥**

25. ராத்ரியிலே நடுக்காட்டில் அகப்பட்ட ராமாநுஜரும், மிக வருந்திய நெஞ்சினராய், பெருந்தேவியோடு விளங்கும் தீ₃னரக்ஷகனை பேரருளாளனை ஶரணமடைந்தார்.

**किरातरूपी वरदोऽथ देव्या गच्छेम रामानुज साधु काञ्चीम्।**
**इत्यग्रगामी प्रियया स पीत्वा तदत्तकूपोदकमन्तरासीत्॥२६॥**

26. தனது மனத்துக்கினிய பெருந்தேவியோடு கூடிய வரத₃ராஜனும் வேடருருவை த₄ரித்துவந்து "ராமாநுஜரே! காஞ்சியை எளிதில் அடைவோம்" என்று கூறி, அவருக்கு முன்னே வழிகாட்டிச்சென்று, ராமாநுஜரிடம் வேண்டிப்பெற்ற சாலைக்கிணற்று நீரை தே₃வியோடு கூடப்பருகி மறைந்தான்.

**दृष्ट्वा प्रभातेऽथ स पुण्यकोटिविमानमत्यन्तसमीपवर्ति।**
**पीतोदकं तं वरदं विचिन्त्य रामानुजार्योऽप्यतिविस्मितोऽभूत्॥२७॥**

27. விடியற்காலை வேளையான அப்போது அத்திகிரியின் புண்யகோடிவிமானம் மிக அருகில் தெரிவதைக்கண்டு, நீர் பருகியவன் பேரருளாளனே என்று அறுதியிட்டு, ராமாநுஜர் பேராச்சரியமடைந்தார்.

## சாலைக்கிணற்றுநீர்க் கைங்கர்யம்

**सन्ध्यामुपास्यान्हिकसत्तटाके संसेव्य देवीं वरदं च हृष्टः।**
**नित्यं तदङ्गीकृतकूपतीर्थैः रामानुजार्यस्तमतोषयच्च॥२८॥**

28. அருகிலிருக்கும் நல்லதொரு குளத்தில் ஸ்நானம் ஸந்த்₄யா வந்த₃னம் முதலான காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, பெருந் தே₃வியையும், பேரருளாளனையும் ஸேவித்துப் பேரானந்த₃ம் கொண்ட வராய், அவ்வரத₃ன் விரும்பிப் பருகிய சாலைக்கிணற்றுநீரை தினந் தோறும் தாமே சுமந்துசென்று அளித்து அவனை உகப்பித்துவந்தார்.

## கோ₃விந்த₃ர் உள்ளங்கைகொணர்ந்த நாயனாரானது

**गंगातटाद्यादवमन्त्रवश्यो गोविन्दभट्टस्स्वकरस्थलिङ्गः।**
**स्वग्राममागम्य च कालहस्तिन्यवात्स तत्स्थानविचारकस्सन्॥ २९॥**

29. யாத₃வரின் மந்திரசக்திக்குக் கட்டுப்பட்ட கோ₃விந்த₃ரும் கங்கையில் நீராடும்போது தமது உள்ளங்கையில் சிவலிங்கத்தைப் பெற்றவராய், தமது கிராமமான மது₄ரமங்க₃லத்திற்குச்சென்று அந்த லிங்க₃த்தைப் பிரதிஷ்டைசெய்து, காளஹஸ்திக்குச்சென்று, அங்குள்ள சிவாலய கார்யங்களை நிர்வஹிப்பவராய் அங்கு வஸித்து வந்தார்.

## ராமானுஜர் யாத₃வரை அடியோடு கைவிடுதல்

**काञ्च्यामथागम्य स यादवोऽपि रामानुजं वीक्ष्य तदागमं च।**
**श्रुत्वा समाहूय विलोभयंस्तं ततस्स्वशिष्यैस्समपाठयच्च॥ ३०॥**

30. காஞ்சிக்கு வந்து சேர்ந்த யாத₃வரும், ராமானுஜரைக்கண்டு, அவர் திரும்பிவந்த விதத்தையும் கேள்விப்பட்டு, அவரை அழைத்து மயக்கி, மறுபடியும் தமது சிஷ்யர்களோடு சேர்த்துப் பாடம் சொல்லி வந்தார்.

**विरुद्धमर्थं तु कदाचिदुक्तं सदेव सोम्येदमिति श्रुतेश्च।**
**अशिक्षयत्सङ्गतमर्थमुक्त्वा रामानुजार्योऽथ तमत्यजत्सः॥ ३१॥**

31. **"ஸதே₃வ ஸோம்யேத₃மக்₃ர ஆஸீதே₃கமேவாத்₃விதீயம்"** [சா₂ந் 6-2-1] என்னும் உபநிஷத்₃வாக்யம்—ஸஜாதீய விஜாதீய ஸ்வக₃தபே₄த₃ மற்ற சின்மாத்ரவஸ்துவைச் சொல்லுகிறது என்னும் அவப்பொருளை ஒரு நாள் யாத₃வர் உரைத்தவுடன், அந்த வாக்யம் உலகிற்கு நிமித்த

உபாதா₃ந ஸஹகாரிகாரணங்கள் மூன்றுமான ஸகலசேதநாசேதந ஸகலகல்யாணகு₃ணவிஶிஷ்ட ப்₃ரஹ்மத்தையே சொல்லுகிறது என்னும் பொருந்திய பொருளை அவருக்கு அறிவுறுத்தி, ராமாநுஜர் யாத₃வரிடம் படிப்பதை அடியோடு கைவிட்டார்.

## ஆளவந்தார் பெரியநம்பியை அனுப்புதல்

त्यक्तस्सदा यादवमर्कटेन रामानुजार्यो मणिरद्भुतश्रीः।
हृद्यः करीशस्य हरेरभूदित्याकर्ण्य हृष्टस्स च यामुनार्यः॥ ३२॥
रामानुजार्यानयनाय सोऽपि शिष्यं महापूर्णमथादिदेश।
गत्वाऽथ काञ्चीं स च तोषयित्वा तं स्तोत्ररत्नेन तुतोष भूयः॥ ३३॥

32, 33. பேரொளிவீசும் ரத்தினம்போன்றவரான ராமாநுஜர் யாத₃வராகிற குரங்கின் கையிலிருந்து விடுபட்டு, அத்திகிரியருளாளனின் நெஞ்சுக்கு இனியவ(ஹ்ருத்₃ய)ரானார் என்று கேள்விப்பட்டு உகந்த யாமுநாசார்யர் (ஆளவந்தார்), ராமாநுஜரை ஸ்ரீரங்க₃த்திற்கு அழைத்து வருவதற்காகத் தமது சிஷ்யரான பெரியநம்பியை அனுப்பினார். காஞ்சிக்குச் சென்ற அப்பெரியநம்பியும், தமது ஆசார்யர் அருளிய ஸ்தோத்ரரத்னத்தை அநுஸந்தி₄த்து ராமாநுஜரை உகப்பித்து, (அவரால் ஸத்கரிக்கப்பெற்றுத்) தாமும் மிகவுகந்தார்.

## ஆளவந்தார் பரமபத₃ப்ராப்தி

रामानुजार्योपि स यामुनार्यं संसेवितुं रङ्गपुरीं गमिष्यन्।
प्राज्यं महापूर्णयुतः कवेरकन्यातटे सूरिगणं ददर्श॥ ३४॥

34. பெரியநம்பியோடுகூடிய ராமாநுஜாசார்யரும், ஆளவந்தாரை ஸேவிப்பதற்கு ஸ்ரீரங்கம் செல்லாநிற்கும்போது, வடதிருக்காவேரிக் கரையிலேயே மிகுதியான ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தைக் கண்டார்.

रङ्गेशमुख्या अपि सूरयस्तौ दृष्ट्वा महापूर्णयुताय तस्मै।
रामानुजार्याय निवेद्य शान्ताः श्रीयामुनार्याङ्गुलिमुद्रणं च॥ ३५॥

35. (ஆளவந்தார் திருக்குமாரரான) திருவரங்கப்பெருமாளரையர் முதலான அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள், அவ்விருவரையும் பார்த்து, ஆளவந்தார் பரமபத₃மடைந்ததை அவர்களுக்கு விண்ணப்பித்து ஒருவாறு ஆறுதலடைந்தவர்களாய், ஆளவந்தாருடைய திருவிரல்கள் மூன்று மடங்கியிருப்பதையும் காட்டினார்கள்.

## திருவிரல்கள் நிமிர்தல்

**तद्व्यासस्सूत्रं विवरीकरिष्ये तत्तातनामापि शठारिनाम।**
**युक्तं विधास्याम्युभयोरितीयं रामानुजोऽवन्दत तत्पदाब्जे॥ ३६ ॥**

36. (திருவிரல்கள் மடங்கியிருப்பதற்குக் காரணமான ஆளவந்தாருடைய மூன்று மனக்குறைகள்பற்றிக் கேள்விப்பட்ட ஸ்ரீராமானுஜர், அவருடைய மனக்குறைகளைத் தீர்ப்பதற்காக) "(1) வ்யாஸருடைய ப்₃ரஹ்மஸூத்ரத்திற்கு பா₄ஷ்யமெழுதி விவரிப்பேன். (2) அவருடைய தகப்பனாரான பராஶரரின் பெயரையும், (3) நம்மாழ்வாரின் திருநாமத்தையும் இருவர்க்கு இடுவதன்மூலம் அவர்களுக்கு நன்றி செலுத்துவேன்" என்று ப்ரதிஜ்ஞை செய்து, அவரது திருவடித் தாமரையிணையை வணங்கினார்.

**क्षणेन तस्याङ्गुलयश्च तिस्रः पुरेव भूतास्तदुदीक्ष्य सर्वे।**
**सिद्धान्तनिर्धारणसार्वभौमस्सत्यं भविष्यत्ययमित्यवोचन्॥ ३७॥**

37. அக்கணத்திலேயே, ஆளவந்தாருடைய மடங்கிய மூன்று விரல்களும் முன்போல் நிமிர்ந்தன. அதைக்கண்ட அனைவரும் "இவரே வைதி₃கஸித்₃தா₄ந்தத்தை நிலைநிறுத்துமவர்களுக்குத் தலைவராவார் என்பது உறுதி" என்று உரைத்தார்கள்.

## ஆறு வார்த்தைகள்

**त्वरन्नसंसेव्य स रङ्गनाथमागम्य काञ्चीं वरदं प्रणम्य।**
**तीर्थादिकैङ्कर्यकरः कदाचित् किं वाद्य कर्तव्यमितीव दध्यौ॥ ३८॥**

38. (அதற்குப்பின்) (ஆளவந்தாரை உயிரோடு ஸேவிக்காத மனக்குறையாலே) அரங்கநகரப்பனை ஸேவிக்காமலே காஞ்சிக்குத் திரும்பிய ராமாநுஜர், வரத3ராஜனை வணங்கி, அவருக்குச் சாலைக் கிணற்றுநீரை அளித்தல் முதலான கைங்கர்யங்களைச் செய்கின்றவராய், ஒரு சமயம் "நாம் இனிச்செய்யவேண்டியது என்ன" என்று சிந்தித்தார்.

**तत्रत्यपूर्णं वरदान्तरङ्गं वर्णाश्रमाचारविधायकं तम्।**
**संप्रार्थयच्चित्तगतं ममार्थं ज्ञात्वा करीशाद्वद देशिकेति॥ ३९॥**

39. அக்காஞ்சியிலிருந்தவராய், வர்ணாஶ்ரமாசாரங்களைத் தாமும் அநுஷ்டி2த்துப் பிறரையும் அனுஷ்டி2க்கச்செய்பவராய், வரத3னுக்கு அந்தரங்க3ராய் (திருவாலவட்ட கைங்கர்யம் செய்யும்) திருக்கச்சி நம்பியைப்பார்த்து, "நம்பியே! நான் நெஞ்சில் கொண்டுள்ள அர்த்த2ங்களைத் தேவப்பெருமாளிடமிருந்து அறிந்து, அவை பெருமாள் உகந்தவையா என்பதை எனக்குச் சொல்லுவீர்" என்று பிரார்த்தி2த்தார்.

**श्रीमान् परं तत्त्वमहं मतं मे भेदः प्रपत्तिर्निरपायहेतुः।**
**नावश्यकी च स्मृतिरन्त्यकाले मोक्षो महापूर्ण इहार्यवर्यः॥ ४०॥**
**इत्यर्थषट्कं वरदोपदिष्टं रामानुजार्याय स चाथ पूर्णः।**
**रहस्यवादीत् स रहस्यवादी तस्माद्धि रामानुजमान्यनामा॥ ४१॥**

40, 41. (1) "ஸ்ரீமானான நானே பரதத்வம். (2) 'உலகிற்கும் எனக்கும் பே4த3ம் உண்டு' என்பதே என் மதம் (3) என்னை ஶரணமடைவதே என்னைப் பெறுவதற்குக் கண்ணழிவற்ற உபாயம். (4) அப்படி ஶரணமடைந்தவர்களுக்கு அந்திமகாலத்தில் என் நினைவு தேவையில்லை. (5) இப்பிறப்பின் இறுதியிலேயே (அவர்களுக்கு) மோக்ஷம் உறுதி. (6) பெரியநம்பியே ராமாநுஜரால் ஆசார்யராக ஆஶ்ரயிக்கத் தக்கவர்"-என்னும் ஆறு வார்த்தைகளையும் வரத3ராஜப்பெருமாளிடமிருந்து பெற்ற ரஹஸ்யவாதியான திருக்கச்சிநம்பி அவ்வார்த்தைகளை ராமாநுஜருக்கு ரஹஸ்யமாகக்கூறி, அதனால் "ராமாநுஜ மாந்யர்" [ராமாநுஜராலும் கௌ3ரவிக்கப்பட்டவர்] என்னும் பெயரைப் பெற்றார்.

## பெரியநம்பியை ஆஶ்ரயித்தல்

रामानुजार्योऽपि पुरं गमिष्यन् रङ्गं ततः श्रीमधुरान्तकस्थम्।
श्रीभूमिनीलादियुतं तटाकपालं सिषेवे रघुनन्दनं तम्॥४२॥

42. ராமாநுஜரும் பெரியநம்பியை ஆஶ்ரயிப்பதற்காக ஸ்ரீரங்க₃த்திற்குச் செல்கின்றவராய், வழியில் மது₄ராந்தகத்திலே ஸ்ரீபூ₄மி நீளா தே₃விகளோடு கூடிய கருணாகரனையும், ஸீதையோடுகூடிய ஏரிகாத்த ராமபிரானையும் ஸேவித்தார்.

सतीर्थ्यसन्देशत आपतन्तं दिष्ट्या महापूर्णमुदीक्ष्य तत्र।
तत्पादपद्मे प्रणिपत्य हर्षाद्रामानुजार्यस्स च बाष्पपूर्णः॥४३॥

43. ஆளவந்தாரின் மற்ற ஶிஷ்யர்களால் (ராமாநுஜரை ஆட்கொள்ளும்படி) நியமிக்கப்பெற்று மது₄ராந்தகத்தை அடைந்திருந்த பெரியநம்பியையும் அங்கேயே தெய்வச்செயலாலே ஸேவித்து, அவருடைய திருவடித்தாமரையிணையை வணங்கி, ஆனந்தக்கண்ணீர் நிறைந்தவரானார் ராமாநுஜாசார்யர்.

परस्परादेशविचारहर्षात्तत्सन्निधौ श्रीवकुलद्रुमस्य।
छायायुतं तत्परमं पदं च ध्यात्वा महापूर्णगुरुं स भेजे॥४४॥

44. ஒருவர்க்கொருவர், தங்களுக்கு ஏற்பட்ட நியமனத்தை விசாரித்து அறிந்து உகந்தபின், அந்த மது₄ராந்தகம் கோயிலிலே, மகிழ மரத்தின் நிழலுடைய அவ்விடத்தையே பரமபத₃மாக தியானித்து, பெரியநம்பியை ராமாநுஜர் ஆசார்யராக அடைந்தார்.

स शङ्खचक्राङ्कनपुण्ड्रयागमन्त्रांस्तदर्थैरपि मन्त्ररत्नम्।
अन्यांश्च तत्रोपदिदेश मन्त्रान् रामानुजाचार्यवराय तस्मै॥४५॥

45. (1) ஶங்க₂சக்ராங்கனம், (2) ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ாரணம், (3) தா₃ஸ்யநாமம், (4) யாக₃ஸம்ஸ்காரம், (5) மந்த்ரரத்னமாகிற த்₃வயத்தையும் (திருவஷ்டாக்ஷரம் முதலிய) மற்ற மந்திரங்களையும் பொருளோடு உபதே₃ஶித்தலாகிற மந்த்ரஸம்ஸ்காரம் என்னும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெரியநம்பி ராமாநுஜருக்கு அங்கேயே செய்தருளினார்.

## க்₃ரந்தே₂ாபதே₃ஶம்

तादृङ्महावैभवदिव्यदेशात्काञ्चीमथागम्य गुरुस्सशिष्यः।
अन्वर्थनाम्ना वरदं प्रणम्य रामानुजार्यावसथं प्रपेदे ॥ ४६ ॥

46. அத்தகைய பெருமை படைத்த தி₃வ்யதே₃ஶமாகிற மது₄ராந்தகத்திலிருந்து, சிஷ்யரான ராமானுஜரோடு காஞ்சியை அடைந்த ஆசார்யரான பெரியநம்பி, பொருந்திய பெயரையுடைய வரத₃ராஜப் பெருமாளை வணங்கி, ராமானுஜருடைய இருப்பிடத்தை அடைந்தார்.

उपादिशत्स त्रिसहस्रगाथास्तद्व्याससूत्रार्थमपि प्रहृष्टः।
रामानुजार्यश्च गुरुं सदारमपूजयन्नित्यमभीष्टवृत्त्या ॥ ४७ ॥

47. மிகவுகந்த அப்பெரியநம்பி, நாலாயிர தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களில் முதல் மூன்று ஆயிரங்களையும், வ்யாஸருடைய ப்₃ரஹ்மஸூத்ரங்களின் பொருளையும் ராமானுஜருக்கு உபதே₃ஶித்தார். மனைவியோடு கூடிய அவரை, ராமானுஜரும் அவருகந்த கைங்கர்யங்களைச் செய்து ஆராதி₄த்துவந்தார்.

## ஸந்யாஸாஶ்ரம ஸ்வீகாரம்

केनापि कार्येण ततः कदाचिद्रामानुजे भूतपुरं प्रयाते।
तत्पत्न्यधिक्षेपनिकर्षवाचा रुष्टां स्वदेवीं स चुकोप पूर्णः ॥ ४८ ॥

48. ஒரு காரியத்தை முன்னிட்டு ராமானுஜர் ஸ்ரீபெரும்பூதூருக்குச் சென்றிருந்தபோது, அவரது பத்னியாலே ஜாதியில் தாழ்வைக்காட்டி அவமதிக்கப்பெற்றுக் கோபமடைந்த தனது பத்னியைப் பெரியநம்பி கோபித்தார்.

पूर्णस्सदेव्याथ जगाम रङ्गं तच्चापि वृत्तं स निशम्य रुष्टः।
रामानुजार्यो गुरुभक्तिपूर्णस्स्वदेविकां मातृगृहं निनाय ॥ ४९ ॥

49. அதற்குப்பின், பெரியநம்பி தமது மனைவியையும் அழைத்துக் கொண்டு ஸ்ரீரங்க₃ம சென்றுவிட்டார். (ஸ்ரீ பெரும்பூதூரிலிருந்து திரும்பிவந்து) அச்செய்தியைக் கேள்விப்பட்ட ஆசார்யப₄க்திமிக்க

ராமாநுஜரும் மிகக்கோபங்கொண்டவராய், தமது மனைவியைத் தாய் வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.

**पत्नीं परित्यज्य स वीतरागः श्रीदेवराजं प्रणिपत्य तस्मात् ।**
**तुर्याश्रमं स्वीकृतवान् ददौ स देवोऽपि तस्मै यतिराजनाम ॥५०॥**

50. இல்லறத்தில் வைராக்₃யமடைந்த அந்த ராமாநுஜர் மனைவியைக் கைவிட்டு, ஸ்ரீ தே₃வராஜப்பெருமாளை வணங்கி, அவரிடமிருந்தே ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டார். அப்பெருமானும் அவருக்கு 'யதிராஜர்' என்னும் திருநாமத்தை அளித்தான.

**ततस्त्रिदण्डी स शिखोपवीतकाषाययुक्तो मनुरत्नजापी ।**
**वर्णाश्रमाचारपरश्चकाशे रामानुजार्यो यतिसार्वभौमः ॥ ५१ ॥**

51. அதற்குப்பின், யதிகட்கிறைவரான ராமாநுஜர், த்ரித₃ண்ட₃த்தையுடையவராய், ஶிகை₂, யஜ்ஞோபவீதம், காஷாயம் ஆகியவற்றோடு கூடியவராய், மந்த்ரரத்னமான த்₃வயத்தை அநுஸந்தி₄ப்பவராய், வர்ணாஶ்ரமாசாரங்களின்படி நடப்பவராக விளங்கினார்.

## கூரத்தாழ்வானும், முதலியாண்டானும் ஆஶ்ரயித்தல்

**तत्रैव कूराधिपवात्स्यनाथवाधूलनाथाश्च समाश्रितास्तम् ।**
**तेभ्योऽपि रामानुजसंयमीन्द्रस्स शङ्खचक्राङ्करहस्यदोऽभूत् ॥ ५२ ॥**

52. அக்காஞ்சியிலேயே, கூரத்தாழ்வானும், வாத்ஸ்யகுலத்தலைவரான நடாதூராழ்வானும், வாதூ₄லகுலத்தலைவரான முதலியாண்டானும் ராமாநுஜரை ஆஶ்ரயித்தனர். ராமாநுஜரான யதிராஜர் அவர்களுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்வித்தார்.

## யாத₃வப்ரகாஶர் ஆஶ்ரயித்தல்

**ततोऽभवद्यादवसम्प्रकाशः श्रीयामुनाचार्यकटाक्षशुद्धः ।**
**गोविन्दयोगी यतिराजशिष्यो ग्रन्थं स कञ्चिद्यतिधर्ममाह ॥ ५३ ॥**

53. ஆளவந்தாருடைய கடாக்ஷத்தால் ஶுத்₃தி₄யடைந்த யாத₃வப்ரகாஶரும் யதிராஜ ஶிஷ்யராகி, 'கோ₃விந்த₃ ஜீயர்' என்னும் திரு

நாமம்பெற்று, ஸந்யாஸிகளின் த₄ர்மங்களை விளக்கும் ‘யதித₄ர்ம ஸமுச்சயம்’ எனும் நூலை இயற்றினார்.

## ஸ்ரீரங்க₃ நிர்வாஹத்தை ஏற்றுக்கொள்ளல்

श्रीरङ्गराजार्यवरः कदाचित गत्वाथ काञ्चीं वरदं प्रणम्य।
आदाय रामानुजसंयमीन्द्रं श्रीरङ्गमेवाप्तुमथ प्रतस्थे ॥ ५४ ॥

54. ஒரு சமயம், திருவரங்கப்பெருமாளரையர், காஞ்சிக்குச் சென்று வரத₃னை வணங்கி, அவரிடமிருந்து ராமாநுஜரை வரமாகப் பெற்று அழைத்துக்கொண்டு, ஸ்ரீரங்க₃த்தைக் குறித்துப் புறப்பட்டார்.

ततस्स कूरेशमुखान्तरङ्गैरन्यैश्च शिष्यैर्यतिराजवर्यः।
श्रीशं च नत्वा मधुरान्तकस्थं श्रीरङ्गमासाद्य सिसेविषुस्सन् ॥ ५५ ॥
प्रत्युद्गतै रङ्गपतेर्नियोगात् सम्मानितो माल्यमुखैर्यतीशः।
श्रियं प्रणम्याथ च रङ्गनाथं श्रीकार्यनिर्वाहधुरन्धरोऽभूत् ॥ ५६ ॥

55, 56. அதற்குப்பின் கூரத்தாழ்வான் முதலான அந்தரங்க₃ ஶிஷ்யர்களோடு கூடிய யதிகட்கிறைவர், மது₄ராந்தகத்திலிருக்கும் பெருமாளை வணங்கி, ஸ்ரீரங்க₃த்திற்கு வந்து பெரியபெருமாளை ஸேவிக்க விருப்பங்கொண்டவராய் எழுந்தருளும்போது, ரங்க₃நாத₂னின் ஆஜ்ஞை யாலே எதிர்கொண்டழைத்தவர்களாலே, (பெருமாளுடைய) மாலை முதலானவற்றாலே ப₃ஹுமானம் செய்யப்பெற்றவராய், பெரியபிராட்டி யாரையும், பிறகு பெரியபெருமாளையும் வணங்கி, ஸ்ரீரங்க₃ஸ்ரீகார்ய நிர்வாஹத்திற்குத் தலைவரானார்.

## உப₄யவிபூ₄தி ஸாம்ராஜ்யமடைதல்

विभूतियुग्माधिपतादिकं च सर्वं महापूर्णकटाक्षलब्धम्।
मत्वा स तत्पादसरोजयुग्मं संसेव्य तद्वश्यतयावतस्थे ॥ ५७ ॥

57. (அரங்கனால் அளிக்கப்பெற்ற) உப₄யவிபூ₄தி ஸாம்ராஜ்யத்தைப் பெரியநம்பியின்கடாக்ஷத்தால் கிடைத்ததாக எண்ணி, அவரது திருவடித் தாமரையிணையை வணங்கி, அவருக்கு வஶப்பட்டவராய் விளங்கினார்.

## திருக்கோட்டியூர்நம்பியிடம் உடையவர் திருமந்த்ர சரமஶ்லோகார்த்த₂ங்களைப் பெறுதல்

**ततो महापूर्णगुरोर्नियोगात्प्रणम्य गोष्ठीपुरपूर्णपादौ।**
**मन्त्रार्थतच्छ्लोकवरार्थशिक्षां प्राप्याथ सोऽशिक्षयदप्यनेकान्॥५८॥**

58. அதற்குப்பின், பெரியநம்பியின் நியமனத்தாலே திருக்கோட்டியூர்நமபியின் திருவடிகளை வணங்கி, திருமந்த்ரார்தத₂த்தையும், கீ₃தா சரமஶ்லோகார்த்த₂த்தையும் அவரிடமிருந்து உபதே₃ஶம் பெற்று, திருக்கோட்டியூரிலேயே பலருககு அவற்றை உபதே₃ஶித்தார் எம்பெருமானார்.

## எம்பெருமானார் தரிசனம்

**ततस्स पूर्णोपि तदान्तरङ्गस्सम्मानयंस्तं यतिसार्वभौमम्।**
**त्वद्दर्शनं चेदमितीव तुष्टः प्रोवाच यल्लक्ष्मणदर्शनं तत्॥५९॥**

59. அதற்குப்பின் அத்திருக்கோட்டியூர் நம்பியும் ராமாநுஜரின் திருவுள்ளத்தில் பொங்கும் கருணையை அப்போதே அறிந்து, யதிகட்கிறைவரை 'எம்பெருமானார்' என்று கொண்டாடி மிகவுகந்தவராய், "இந்த த₃ர்ஶனம் உமது பெயராலே 'எம்பெருமானார் தரிசனம்' என்றே பெயர்பெற்று விளங்கும்" என்று கூறினார். அதனாலேயே இது ஸ்ரீராமாநுஜ த₃ர்ஶனம் என்று பெயர்பெற்று விளங்குகிறது.

## திருவரங்கப்பெருமாளரையரிடம் உபதேசம் பெறுதல்

**ततस्स रामानुजसंयमीन्द्रो गुरुं महापूर्णमवन्दताथ।**
**पुनश्च रङ्गेशगुरोर्गृहीतुं कांश्चिद्विशेषान् स तमादिदेश॥६०॥**

60. அதற்குப்பின் யதிராஜரான ராமாநுஜர் (ஸ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளி) ஆசார்யரான பெரியநம்பியை வணங்கினார். மறுபடியும், திருவரங்கப்பெருமாளரையரிடமிருந்து சில அர்த்த₂விஶேஷங்களைப் பெறவேணும் என்று அவர் ராமாநுஜரை நியமித்தார்.

ततश्शठारेश्चरमप्रबन्धं तदर्थसारं सुकविप्रबन्धम् ।
स्तोत्रद्वयं चार्थविशेषयुक्तं तस्माद्गृहीत्वा पुनराप पूर्णम् ॥ ६१ ॥

61. அதன்படியே, நம்மாழ்வாரின் கடைசி ப்ரப₃ந்த₄மான திருவாய்மொழியையும், அதன் ஸாரார்த்த₂த்தையும், மற்ற ஆழ்வார்களின் ப்ரப₃ந்த₄ங்களையும், (ஆளவந்தார் அருளிய) ஸ்தோத்ரரத்னம், சது:ஶ்லோகீ என்னும் இரு ஸ்தோத்ரங்களையும், அவற்றின் பொருளையும் அவரிடமிருந்து பெற்று, மறுபடியும் பெரியநம்பியை அடைந்தார்.

## திருமாலையாண்டானிடம் அருளிச்செயலர்த்த₂ம் பெறுதல்

पुनर्नियुक्तस्स्वगुरोर्यतीशो मालाधराचार्यवरात्सुमेधाः ।
शठारिसूक्तेः परकालसूक्तेरर्थं सहस्रस्य च सोप्यगृह्णात् ॥ ६२ ॥

62. மறுபடியும் தமது ஆசார்யரான பெரியநம்பியால் நியமிக்கப்பெற்ற பேரறிவாளரான யதிராஜர், நாலாயிரத்தில் நாலாவதாயிரமான நம்மாழ்வாருடைய திருவாய்மொழி, திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழி தொடக்கமான இரண்டாமாயிரம், மற்றும் முதலாயிரம், இயற்பா ஆகிய அனைத்தின் பொருளையும் திருமாலையாண்டானிடமிருந்து கற்றார்.

एवंविधोर्थोप्युचितो भवेदित्युक्तं क्वचित्तत्र यतीश्वरेण ।
श्रुत्वा गुरुः पूर्णयुगाय चाह ताभ्यां च तेनाप्यभिनन्दितस्सः ॥ ६३ ॥

63. அப்படிக் கற்கும்போது, சிற்சிலவிடங்களில் 'இப்படியும் அர்த்த₂மிருக்கலாம்' என்று யதிராஜர் அவரிடம் கூறினார். அதைக் கேட்ட திருமாலையாண்டான் திருக்கோட்டியூர் நம்பியிடமும், பெரிய நம்பியிடமும் 'ஆளவந்தார் அருளாத அர்த்த₂ங்களை இவர் இப்படி விஶ்வாமித்ர ஸ்ருஷ்டியாகச் சொல்லுகிறரே !' என்று குறைபட, 'இவர் சொன்னவையும் ஆளவந்தாரால் வேறு உருக்களில் அருளிச்செய்யப்பட்டவையேயாகும். ஆளவந்தார் திருவுள்ளமுகக்காதது இவர் நெஞ்சில் தோன்றுது' என்று அவர்களால் கொண்டாடவே பட்டார் யதிராஜர்.

## ஸ்ரீரங்க₃வாஸம்

एवं रहस्यार्थविशेषयुक्तं वेदान्तमाचार्यगणादधीत्य।
कूरेशवात्स्येशमुखैश्च शिष्यैरुवास रङ्गे मुदितो यतीशः॥ ६४॥

64. இவ்வண்ணமாக ரஹஸ்யார்த்த₂ங்களோடு கூடிய உப₄ய வேதா₃ந்தங்களையும் ஆசார்யர்களிடமிருந்து கற்று, கூரத்தாழ்வான் ஸ்ரீவத்ஸகுலதிலகரான நடாதூராழ்வான் முதலான சிஷ்யர்களோடு, மிகவுகந்து திருவரங்க₃த்தில் வாழ்ந்தார் யதிராஜர்.

## ஆச்சான் ஆஶ்ரயித்தல்; பிள்ளானைக் கடாக்ஷித்தல்

ततस्तदात्रेयनतार्तिहर्ता यतीशपादाम्बुरुहं प्रपन्नः।
पिल्लानमिख्यं स्वपितृष्वसुश्च श्रीशैलपूर्णस्य सुतं निवेद्य॥ ६५॥

आजानसद्वृत्तयतीशभक्तितत्सेवनेच्छाद्यपि तत्सुतस्य।
श्रीशैलपूर्णोक्तिमपि ह्यवोचच्छ्रीवेंकटाद्रीशमिमं भजेति॥ ६६॥

65, 66. அதற்குப்பின், ஆத்ரேயகுலத்துதித்த ப்ரணதார்த்தி ஹரர் என்னும் கிடாம்பியாச்சான் யதிராஜரின் திருவடியில் ஆஶ்ரயித்தார். தனது அத்தைக்கும், (ராமாநுஜரின் மாமாவான) திருமலை நம்பிக்கும் பிள்ளையான பிள்ளானைக் காட்டிக்கொடுத்து, அப்பிள்ளானுடைய இயல்வான நல்லொழுக்கத்தையும், யதிராஜப₄க்தியையும், அவருக்குக் கைங்கர்யம் செய்வதில் விருப்பம் முதலானவற்றையும் விண்ணப்பித்து, "இந்த யதிராஜரையே திருவேங்கடமுடையானாக நினைத்து அடைவாயாக" என்று திருமலைநம்பி தனக்குச் சொன்ன வார்த்தையையும் ஆச்சான் ராமாநுஜருக்குக் கூறினார்.

तं वीक्ष्य बालं स तदैव सर्वमन्त्रान् सहार्थान् प्रणतार्तिहर्त्रे।
दिदेश तन्मङ्गलदिव्यदेहसंरक्षकोऽभूत्तत एव सोपि॥ ६७॥

67. இளம் வயதினரான அப்பிள்ளானைக் கடாக்ஷித்து, அப்போதே ஆச்சானுக்கு எல்லா மந்திரங்களையும், அவற்றின் பொருளையும் உபதே₃ஶித்தார். அதனாலேயே அவரும் யதிராஜருடைய தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்தைப் பரிவுடன் நோக்குமவரானார்.

## ஆச்சானுக்கு மடைப்பள்ளி கைங்கர்ய நியமனம்

**ततः कदाचिद्विषयुक्तभिक्षां ज्ञात्वा यतीशस्त्रिदिनोपवासः।**
**निशम्य तत् द्वावपि पूर्णवर्यौ गोष्ठीपुरादापतुराशु रङ्गम् ॥ ६८ ॥**

68. அப்போது ஒரு ஸமயம், தம்மிடம் விரோத₄ங்கொண்ட சிலர் விஷங்கலந்த பி₄க்ஷையை இடுவித்ததை அறிந்த யதிராஜர், மூன்று தினங்கள உபவாஸமிருந்தார். அதைக்கேட்டவுடன திருக்கோட்டியூர் நம்பியும், பெரியநம்பியும் திருக்கோட்டியூரிலிருந்து ஸ்ரீரங்க₃த்திற்கு விரைவில் வந்து சேர்ந்தார்கள்.

**प्रत्युद्गतं तं प्रणतं यतीशं त्वद्देहमानिप्रणतार्तिहर्त्रा।**
**संशोधितां स्वीकुरु नित्यभिक्षामित्यूचतुस्तौ स तथाकरोच्च ॥ ६९ ॥**

69. அப்போது எதிர்கொண்டு அழைக்கவந்த யதிராஜர் (நடுப் பகலில் காவேரி மணலில்) அவர்களைக் கீழே விழுந்து வணங்காநிற்க, (அவர் திருமேனியில் பரிவாலே கிடாம்பியாச்சான் பதற), 'உமது திருமேனியில் பரிவுடைய இந்தக்கிடாம்பியாச்சானால் பரிஶோதி₄க்கப் பட்ட பி₄க்ஷையையே நீர் தினந்தோறும் கொள்வீர்' என்று நம்பிகளிருவரும் யதிராஜர்க்கு நியமித்தனர். அவரும் அப்படியே செய்து வந்தார்.

## கோ₃விந்த₃ப₄ட்டர் திருந்திய செய்தி

**गोविन्दभट्टान्तरशिक्षणार्थं स्वप्रेरिताश्चापुरथोचुरेवम्।**
**श्रीशैलपूर्णाङ्घ्रिसरोजभृङ्गो गोविन्दभट्टोऽभवदस्तलिङ्गः ॥ ७० ॥**

70. (தனது சிறியதாயார் பிள்ளையான) கோ₃விந்த₃ப₄ட்டர் கருத்தைத் திருத்துவதற்காகத் திருமலைநம்பியிடம் யதிராஜரால் அனுப்பப் பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள், அங்குசென்று திரும்பிவந்து, "கோ₃விந்த₃

ப₄ட்டர் (உள்ளங்கைகொணர்ந்த நாயனாராயிருந்த நிலைபோய்) சிவலிங்க₃ ஸம்ப₃ந்த₄ம் கழியப்பெற்று, திருமலைநம்பியின் திருவடித்தாமரையில் வண்டுபோலேயானார்" என்னும் செய்தியை யதிராஜருக்குத் தெரிவித்தனர்.

## க்₃ரந்த₂ங்கள் அருளல்

**वेदार्थसंक्षेपमथो यतीशो वेदान्तसूत्रस्य च सारदीपौ।**
**भाष्यं च गीताविवृतिं च कृत्वा वात्स्येशमुख्येभ्य उपादिशच्च॥ ७१॥**

71. அதற்குப்பின், யதிராஜர் வேதா₃ர்த்த₂ஸங்க்₃ரஹத்தையும் ப்₃ரஹ்மஸூத்ர வ்யாக்₂யானங்களான வேதா₃ந்தஸார தீ₃பங்களையும், கீ₃தா வ்யாக்₂யானமான கீ₃தாப₄ாஷ்யத்தையும், அருளி, கூரத்தாழ்வான் முதலான சிஷ்யர்களுக்கு உபதே₃ஶித்தார்.

**अबाधितार्थैरनपायवाचां तद्व्याससूत्रस्य यथार्थभाष्यम्।**
**कृत्वा यतीन्द्रो धुरि यामुनार्यमनोरथं पूरितवान् स आद्यम्॥ ७२॥**

72. ஆதி₃யந்தமற்ற வேத₃வாக்யங்களுக்கு முரண்படாத பொருளை விளக்குவதன்மூலம் வ்யாஸருடைய ப்₃ரஹ்மஸூத்ரங்களுக்கு உண்மைப்பொருளை விளக்கும் ஸ்ரீப₄ாஷ்யத்தை அருளிச்செய்து, ஆளவந்தாரின் மனோரத₂மான தமது பொறுப்புகளில் முதலாவதை நிறைவேற்றினர் யதிராஜர்.

**ततः कदाचित्स हि रङ्गनायिकाश्रीरङ्गनाथावपि फाल्गुनोत्तरे।**
**मुदाभिषिक्तौ स तदा प्रपद्य तौ गद्यत्रयं चाप्यवदद्यतीश्वरः॥ ७३॥**

73. அதற்குப்பின் ஒரு பங்குனி உத்திரத்திருநாளிலே ஸ்ரீரங்க₃ நாயகியும், ஸ்ரீரங்க₃நாத₂னும் சேர்த்தியிலே பேரானந்தத்தோடு திருமஞ்சனம் கண்டருளியபின் அவர்களை ஶரணமடைந்து, அதை விளக்கும் க₃த்₃யத்ரயத்தையும் அருளிச்செய்தார் யதிராஜர்.

**भाष्यादिभिस्तत्त्वविदोऽथ गद्यैः श्रीशं प्रपन्नस्य तदेकवृत्तेः।**
**कैङ्कर्यमाप्रापणकार्यमाह नित्याभिधग्रन्थमुखाद्यतीशः॥ ७४॥**

74. ஸ்ரீப₄ாஷ்ய கீ₃தாப₄ாஷ்ய ஸார தீ₃ப வேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹங்களால் தத்வஹித புருஷார்த்த₂ங்களை அறிந்தவனாய், மூன்று க₃த்₃யங்களாலும் ஸ்ரீமந்நாராயணனை ஶரணமடைந்தவனாய், அந்த ஸ்ரீய:பதிக்கே கைங்கர்யம் செய்யும அதி₄காரிக்கு, அந்த லக்ஷ்மீபதியை அடையும் வரையில் செய்யவேண்டிய நித்ய கைங்கர்யங்களை 'நித்ய க்₃ரந்த₂ம்' என்னும் நூலின் மூலம் தெரிவித்தார் யதிராஜர்.

## திருமலைநம்பியிடம் ஸ்ரீராமாயணம் கேட்டது

**ततस्स्वशिष्यैर्बहुभिर्यतीशः काञ्चीपथाद्वेंकटशैलवर्यम् ।**
**भक्त्या भजन् तद्बहुमानितस्सन् श्रीशैलपूर्णं प्रणतो गुरुं तम् ॥ ७५ ॥**

75. அதற்குப்பின் பல சிஷ்யர்களோடு கூடியவராய், காஞ்சீ மார்க்க₃மாக ப₄க்தியோடு திருவேங்கட மலைக்குச்சென்ற யதிராஜர் திருமலைநம்பியாகிற ஆசார்யரால் எதிர்கொண்டழைக்கப்பட்டு, அவரை வணங்கினார்.

**तद्वीक्षितस्सन् कमलानिवासं प्रपद्य तत्पूर्णवराद्यतीशः ।**
**रामायणं तद्विविधैर्महार्थैस्संवत्सरं तत्र वसन्नगृह्णात् ॥ ७६ ॥**

76. அவருடைய கடாக்ஷத்தாலே அலர்மேல் மங்கையுறை மார்பனை ஶரணடைந்து, அத்திருமலையிலேயே ஒருவருஷம் வாழ்ந்து அத்திருமலைநம்பியிடமிருந்து பலவித₄மான அரும்பொருள்கள் நிறைந்த ஸ்ரீராமாயணத்தை உபதே₃ஶம் பெற்றார்.

## பிள்ளானையும் கோ₃விந்த₃ப₄ட்டரையும் பெறுதல்

**पूर्णात्मजौ द्वावपि तन्नियुक्तौ यतीशमाश्रित्य समस्तमर्थम् ।**
**अवापतुस्तत्र सुतं कनिष्ठं पूर्णोऽप्यदात्तद्बहुमानपात्रम् ॥ ७७ ॥**
**पिल्लानमिख्यं स च तेन दत्तं गोविन्दभट्टं निजयाचितं च ।**
**संगृह्य हृष्टस्समवाप रङ्गं काञ्चीपथादेव यतीश्वरश्च ॥ ७८ ॥**

77, 78 திருமலைநம்பியின் பிள்ளைகள் இருவரும், அவராலே நியமிக்கப்பெற்று யதிராஜரை ஆஶ்ரயித்து, அவரிடமிருந்து எல்லா

அர்த்த₃ங்களையும் உபதே₃ஶம் பெற்றனர். அவர்களில் கடைசிப் பிள்ளையான (திருக்குருகைப்பிரான்) பிள்ளானைத் திருமலைநம்பி யதிராஜருக்கு அபி₄மான புத்ரராக அளித்தார். யதிராஜரும், நம்பியால் அளிக்கப்பெற்ற அப்பிள்ளானையும், தானே யாசித்துப்பெற்ற (தனது சிறியதாயார் பிள்ளையான) கோ₃விந்த₃பட்₄டரையும் அழைத்துக் கொண்டு, காஞ்சீ மார்க்க₃மாகவே ஸ்ரீரங்க₃த்தை அடைந்தார்.

## எம்பாரும் ப₄ட்டரும்

**गोविन्दभट्टं च विरक्तमैक्ष्य यतिं तमेम्बारमिधं स चक्रे।**
**जातस्सुतो रङ्गपतेः प्रसादात्तत्कूरनाथस्य च साधुभट्टः॥ ७९॥**

79. அந்த கோ₃விந்த₃ப₄ட்டர் விஷயவைராக்₃யமுள்ளவராயிருப்பதைக்கண்டு, அவருக்கு ஸந்யாஸாஶ்ரமத்தையும் (தனது பெயரைச் சுருக்கி) 'எம்பார்' என்னும் திருநாமத்தையும் அளித்தார் எம்பெருமானார். ஸ்ரீ ரங்க₃நாத₂னுடைய அருளாலே கூரத்தாழ்வானுக்குப் பிள்ளையாகப்பிறந்தார் பிஞ்சாய்ப் பழுத்தவரான ப₄ட்டர்.

## இரண்டாவது யாமுநாசார்ய மநோரத₂பூர்த்தி

**भट्टारकं तं च पराशराख्यं कृत्वा कृतं तेन सहस्रनाम्नाम्।**
**भाष्यं प्रतिष्ठाप्य स यामुनार्यमनोरथं पूरितवान् द्वितीयम्॥८०॥**

80. அந்த ப₄ட்டருக்கு பராஶரர் என்னும (பராஶரமஹர்ஷியின்) பெயரை அளித்து, அவரால் இயற்றப்பெற்ற ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்தையும் அரங்கேற்றி, ஆளவந்தாரின் இரண்டாவது மநோரத₂த்தை நிறைவேற்றினார் யதிராஜர்.

## பிள்ளான் ஜ்ஞாநபுத்ரராதல்

**कदाचिदन्तर्मठमर्थचिन्तां कस्य प्रबन्धस्य चिदाचरन्तम्।**
**यतीश्वरं वीक्ष्य स पूर्णपुत्रस्तच्चिन्तितार्थो ह्ययमित्यवोचत्॥ ८१॥**

81. ஒருசமயம், தமது மட₂த்தினுள்ளேயிருந்துகொண்டு, தி₃வ்ய ப்ரப₃ந்த₄த்தில் ஒரு பாசுரத்திற்குப் பொருளைப்பற்றி ஆராய்ந்து

கொண்டிருந்த யதிராஜரைக்கண்டு, திருமலைநம்பியின் பிள்ளையான பிள்ளான், அவர் ஆராய்ந்து முடிவுகட்டிய பொருள் இதுவன்றோ என்று உரைத்தார்.

**तदीरितार्थं निजचिन्तितं तं श्रुत्वा यतीशोऽप्यतिविस्मितस्सन् ।**
**नाथान्वयाद्वेद तथेति मत्वा मज्ज्ञानपुत्रेत्यभिषस्वजे तम् ॥ ८२ ॥**

82. தாம் முடிவுகட்டிய பொருளும், அவர் கூறிய பொருளும் ஒன்றுயிருப்பதைக்கண்ட யதிராஜரும் மிகவும் ஆஶ்சர்யமடைந்தவராய், 'நாத₂முனிகளின் (ஜ்ஞான) வம்ஶத்தில் உதி₃த்த பெருமையால் இவர் இப்பொருளை அறிந்தார்' என்று எண்ணி, 'எனது ஜ்ஞாந புத்ரரே!' என்று அவரை அணைத்துக்கொண்டார்.

## ஆருயிரப்படி அருளல்

**रामानुजार्यस्य यतीश्वरस्य ज्ञानात्मजस्तस्य च पादुकेति ।**
**ख्यातश्शठारेश्चरमप्रबन्धं व्याख्यातवांस्तं कुरुकेशवर्यः ॥ ८३ ॥**

83. யதிராஜரான ராமாநுஜாசார்யருக்கு ஜ்ஞாநபுத்ரர் என்றும், அவருடைய பாது₃கையென்றும புகழ்பெற்றவரான (திருக்குருகைப் பிரான்) பிள்ளான், நம்மாழ்வாருடைய கடைசிப் பிரப₃ந்த₄மான திருவாய்மொழிக்கு (ஆருயிரப்படி) வ்யாக்₂யானம் அருளிச்செய்தார்.

## மூன்ருவது யாமுநாசார்ய மநோரத₂பூர்த்தி

**पिल्लानभिख्यं कुरुकेश्वराख्यं कृत्वा तु तं तत्कृतषट्सहस्रम् ।**
**भाष्यं प्रतिष्ठाप्य स यामुनार्यमनोरथं पूरितवांस्तृतीयम् ॥ ८४ ॥**

84. 'பிள்ளான்' என்று பெயர்பெற்றிருந்த அவருக்கு, நம்மாழ்வாரின் திருநாமமான 'திருக்குருகைப்பிரான்' என்னும் பெயரை இட்டு, அவர் அருளிய ஆருயிரப்படி வ்யாக்₂யானத்தையும் அரங்கேற்றி, ஆளவந்தாரின் மூன்ருவது மநோரத₂த்தையும் நிறைவேற்றினுர் யதிராஜர்.

## யஜ்ஞமூர்த்தி அருளாளப்பெருமாளெம்பெருமானர் ஆனது

**यतीश्वरस्याप्यथ यज्ञमूर्तेर्जितो भवेद्यो जयतो मतस्थः।**
**इति प्रतिज्ञाय च रङ्गपुर्यां प्रावर्तताष्टादशरात्रवादः ॥८५॥**

85. அதற்குப்பின், யதிராஜருக்கும், யஜ்ஞமூர்த்தி எனும் அத்₃வைதிக்கும், "இவ்வாத₃த்தில் தோற்பவர் ஜயிப்பவருடைய மதத்தைப் பின்பற்றவேணும்" என்னும் நியமத்துடன், ஸ்ரீரங்க₃த்தில் பதினெட்டுநாள் வாத₃ப்போர் நிகழ்ந்தது.

**स्वप्ने यतीशो वरदेक्षितस्सन् मायामतस्थापकयज्ञमूर्तिम्।**
**वादेऽजयत्त्वं वरदाख्यया स्वं नामाप्यदात्सोऽपि तुतोष शिष्यः॥ ८६ ॥**

86. ஸ்வப்நத்தில் (தமது ஆராத₄னமூர்த்தியான) வரத₃ராஜப் பெருமாளால் கடாக்ஷிக்கப்பட்ட யதிராஜர் (பதினெட்டாவதுநாள்) மாயாவாதி₃மதத்தின் தலைவரான யஜ்ஞமூர்த்தியை வாத₃த்தில் ஜயித்தார். (அருளாளப்பெருமாளின் கடாக்ஷத்தாலே தம்மால் வாத₃த்தில் ஜயிக்கப்பட்ட காரணத்தாலே) அவருக்கு அப்பெருமாளின் திருநாமத்தையும், தமது பெயரையும் சேர்த்து, 'அருளாளப்பெருமாள் எம்பெருமானர்' என்னும் திருநாமத்தை இட்டார் யதிராஜர். சிஷ்யராகி அவரும் மிகவுகந்தார்.

## பரமதநிரஸநம்

**ततो यतीशस्स दिशो विजेतुं शिष्यैरनेकैस्सह तत्र तत्र।**
**गत्वा विजित्यान्यमतं समस्तं सरस्वतीपीठमथाससाद॥८७॥**

87. அதற்குப்பின் யதிராஜர் தி₃க்₃விஜயம் செய்ய எண்ணி, பல சிஷ்யர்களோடு புறப்பட்டு, ஆங்காங்கு சென்று புறமதத்தினர் அனைவரையும் ஜயித்து, (காஷ்மீரதே₃ஶத்தில்) ஸரஸ்வதீ பீட₂த்தை அடைந்தார்.

## ஸ்ரீப₄ாஷ்யகாரரானது

तद्भाष्यमादाय निधाय मूर्ध्नि श्रीभाष्यमेतद्वरभाष्यकृत् त्वम्।
इतीव तस्मै प्रददौ च देवी भाष्यं हयग्रीवमपि स्वदेवम्॥ ८८॥

88. அங்கு அவருடைய ப்₃ரஹ்மஸூத்ரப₄ாஷ்யத்தை ஶிரஸா வஹித்த ஸரஸ்வதீதே₃வி "இதுவே ஸ்ரீ ப₄ாஷ்யம்; மிகச்சிறந்த ப₄ாஷ்யத்தைச் செய்த நீர் இனி ஸ்ரீ ப₄ாஷ்யகாரர் என்றே புகழ்பெறுவீர்" என்று கூறி, அந்த ஸ்ரீப₄ாஷ்யஸ்ரீகோஶத்தையும், தனது ஆராத₄ன மூர்த்தியான ஹயக்₃ரீவரையும் அவரிடம் அளித்தாள்.

गृह्णन् हयग्रीवमपि प्रणम्य कुलागतं तं वरदं च नित्यम्।
आराधयन्नन्यमतानि जित्वा श्रीवेङ्कटाद्रिं पुनराससाद॥ ८९॥

89. அடிபணிந்து ஸ்ரீகோஶத்தையும் ஹயக்₃ரீவரையும் ஏற்றுக் கொண்டு, குலக்ரமப்படி திருவாராத₄னப்பெருமாளாயிருந்த வரத₃ராஜனோடு அவரையும் தினந்தோறும் ஆராதி₄த்துக்கொண்டு, புறமதங்களை ஜயித்துத் திருவேங்கடமலைக்கு மறுபடியும் எழுந்தருளினார் எதிகட்கிறைவர்.

## அப்பனுக்குச் சங்காழி அளித்தது

भक्तात्ततल्लक्षणशङ्खचक्रः श्रीश्रीनिवासश्शिव एव नान्यः।
इतीव शैवै रचिते विवादे तत्प्रत्ययं प्राह यतीश्वरोऽपि॥ ९०॥

90. ப₄க்தனான தொண்டைமான் சக்ரவர்த்தியிடம் ஶங்க₂ சக்ரங்களைக் கொடுத்திருந்ததைப் பற்றுசாகக்கொண்டு, 'ஸ்ரீநிவாஸன் சிவனேயொழிய விஷ்ணுவல்ல' என்று சைவர்கள் வாத₃ம்புரிய முற்பட, அப்பெருமான் விஷ்ணுவே என்பதை நிலைநாட்டினார் யதிராஜர்.

निश्चित्य सर्वेऽप्यथ शङ्खचक्रे शूलं च निक्षिप्य तदालयान्तः।
कवाटमाबध्य ततः प्रभात उद्घाट्य सर्वे ददृशुस्सहैव॥ ९१॥

भङ्क्त्वा त्रिशूलं धृतशङ्खचक्रं श्री श्रीनिवासं च समीक्ष्य शैवाः।
प्रधाविताश्चाशु यतीश्वरेण श्रीशैलपूर्णोऽपि तुतोष भूरि॥९२॥

91, 92. (அப்படியும் சைவர்கள் பிடிவாதம் பிடித்தமையால் அனை வரும் சேர்ந்து நிஶ்சயித்து) ஶங்க₂சக்ரங்களையும், சூலத்தையும் க₃ர்ப்ப₄க்₃ருஹத்தினுள் வைத்துக் கதவைச்சாத்தி, எல்லோரும் ஒன்றுயிருந்து காவல்காத்து, காலையில் ஒன்றுகவே கதவைத்திறந்து உள்ளே புகுந்து திருவேங்கடமுடையானைக் கண்டனர். சூலத்தை ஒடித்தெறிந்து, ஶங்க₂ சக்ரங்களை த₄ரித்துக்கொண்டிருந்த ஸ்ரீநிவாஸனைக்கண்ட சைவர்கள் உடனே ஓடிவிட்டார்கள். யதிராஜரோடு திருமலைநம்பியும் மிகவுகந்தார்.

## புறமதத்தவரின் பொருமை

ततो यतीशो गुरुवीक्षितस्सन् श्रीरङ्गमागम्य समस्तशिष्यैः।
वेदान्तसिद्धान्तविचक्षणोऽभून्मतान्तरस्थाश्च ततः कृतेर्ष्याः॥९३॥

93. திருமலைநம்பியால் பரிபூர்ணமாகக் கடாக்ஷிக்கப்பட்ட யதி ராஜர் எல்லா சிஷ்யர்களோடும் ஸ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளி, வேத₃ாந்தஸித்₃த₄ாந்தத்தை நிலைநாட்டுவதில் வல்லவரானுர். புறமதத் தவர்கள் அதனுல் பொருமை கொண்டனர்.

## சோழராஜாவின் உபத்₃ரவம்

दुर्बोधितश्चोलनृपोऽथ साधून् शिवात्परं नास्ति लिखेति पत्रे।
निर्बध्य चारैरपि तं यतीशमाहूतवांस्तद्विदितं च शिष्यैः॥९४॥

94. அதற்குப்பின் அப்புறமதத்தவர்களால் து₃ர்பே₃ாத₄னை செய்யப்பட்ட சோழராஜா, "'ஶிவனைக்காட்டிலும் மேலானவன் இல்லை' என்று ஏட்டில் எழுது" என்று நல்லவர்கள் அனைவரையும் துன் புறுத்திவந்தான். அவன் இதற்காக யதிராஜரை அழைத்துவரத் தன் வேலைக்காரர்களை அனுப்பினுன். ஶிஷ்யர்கள்மூலம் இச்செய்தி ஸ்ரீரங்க₃த்தை எட்டியது.

काषायधृत्कूरपतिस्त्रिदण्डी प्रायान्महापूर्णयुतस्तु तत्र।
वात्स्येशमुख्यैस्सहितो यतीशश्शुक्लाम्बरः प्राप दिशं प्रतीचीम्॥ ९५॥

95. இதைச் செவியுற்ற கூரத்தாழ்வான் காஷாயத்தையும் த்ரித₃ண்ட₃த்தையும் த₄ரித்தவராய், பெரியநம்பியோடுகூட ராஜ சபைக்குச் சென்றார். நடாதூராழ்வான் முதலானோரோடு கூடியவராய், யதிராஜரும் வெள்ளை வஸ்த்ரம் சாத்திக்கொண்டு மேற்கு தி₃க்கை நோக்கிப் புறப்பட்டார்.

तत्र क्वचित्कैश्चन शिष्यभूतैः काषायदण्डादि समर्पितं सः।
शास्त्रोक्तमार्गेण पुनः प्रगृह्य यथाक्रमाराधनतत्परोऽभूत्॥ ९६॥

96. அப்படிச் செல்லும்போது, ஓரிடத்திலிருந்த சில சிஷ்யர்களால் ஸமர்ப்பிக்கப்பட்ட காஷாயத்தையும் த்ரித₃ண்ட₃த்தையும் ஶாஸ்திரங்களில் சொல்லப்பட்ட முறையில் மறுபடியும் ஏற்றுக்கொண்டு, முறைப்படி எம்பெருமான்களுக்குத் திருவாராத₄னம் செய்துவந்தார் யதிராஜர்.

## மேல்நாட்டு அரசன் ஆஶ்ரயித்தல்

यतीश्वरं तत्र नृपश्च कश्चित्केचिद्द्विजाग्र्याश्च समाश्रितास्तम्।
निष्पिष्टदेहा अपि जैनवर्गा महान् प्रभावः प्रकटीकृतश्च॥ ९७॥

97. மேல்நாட்டை (மைஸூரை) அடைந்த யதிராஜரை, அந்த தே₃ஶத்து அரசனும், சில அந்தணர் தலைவர்களும் ஆஶ்ரயித்தனர். (அவ்வரசனை வசப்படுத்தியிருந்த) ஜைனர்களும் யதிராஜரால் தோற்கடிக்கப்பட்டு (அரசனால்) நிரஸிக்கப்பட்டனர். இதனால் எம்பெருமானாருடைய மஹாப்ரபா₄வமும் வெளிப்பட்டது.

## திருநாராயணபுர ப்ரதிஷ்டை

नारायणस्स्वप्नगतो यतीशं श्रीयादवाद्राविह भूतलान्तः।
वर्ते प्रतिष्ठापय मां मृदं च श्वेतां गृहाणेत्यवदत् स तत्र॥ ९८॥

98. அங்கு யதிராஜரின் கனவில் தோன்றிய திருநாரணன், "யாத₃வாத்₃ரியில் பூ₄மிக்கு அடியில் இன்ன அடையாளமுள்ள இடத்தில் நான் இருக்கிறேன். என்னை அங்கு ப்ரதிஷ்டை செய்வாய்; (ஊர்த்₄வபுண்ட்₃ரத்திற்கான) வெள்ளை மண்ணையும எடுத்துக் கொள்வாய்" என்று அவரிடம் அருளினன்.

**ततो यतीशस्सहसा प्रहृष्टः कल्याणतीर्थेप्यवगाह्य शुद्धः ।**
**तदङ्कसंशोधितसद्विमाने चक्रे स नारायणसुप्रतिष्ठाम् ॥ ९९ ॥**

99. அப்போது யதிராஜரும் மிகவுகந்தவராய், கல்யாணஸரஸ்ஸில் நீராடிப் பரிசுத்₃தி₄பெற்றவராய், அவ்வடையாளங்களைக்கொண்டு (திருநாரணனோடுகூடிய) விமானத்தைக் கண்டுபிடித்து, அக்கோயிலிலே (மூலமூர்த்தியான) திருநாரணனை ப்ரதிஷ்டை₂செய்தார்.

## செல்வப்பிள்ளையைக் கொண்டுவருதல்

**श्वेतां मृदं शिष्ययुतः प्रगृह्य धृत्वाथ रामप्रियविग्रहं तम् ।**
**अन्विष्य डिल्लीशसुतागृहस्थं सम्पत्सुतागच्छ ममेत्यवोचत् ॥ १०० ॥**

100. வெள்ளைமண்ணையும் ஶிஷ்யர்களைக்கொண்டு எடுத்து த₄ரித்துக்கொண்டு, திருநாரணனின் உத்ஸவவிக்₃ரஹமான ராமப்ரியரைத்தேடி டில்லிக்குச்சென்று, டில்லி அரசனின் பெண்ணின் அந்த:புரத்திலிருந்த அப்பெருமாளை 'என் செல்வப்பிள்ளாய்! வருக' என்று கூவினர்.

**तमागतं रामहितं स नीत्वा प्रीत्या स नारायणमुत्सवाद्यैः ।**
**सम्पूजयन्मोदमवाप तत्र डिल्लीशपुत्र्यन्तरधात्तमेत्य ॥ १०१ ॥**

101. ஓடிவந்து மடியில் ஏறிய ராமப்ரியரை அழைத்துக்கொண்டு வந்து திருநாராயணபுரத்தில் உத்ஸவமூர்த்தியாகச் சேர்த்து, அந்தச் செல்வப்பிள்ளையான திருநாரணனுக்கு உத்ஸவம் முதலானவற்றைச் செய்து இன்புற்றார் எதிராஜர். அப்பெருமாளைத் தேடிவந்த டில்லி அரசனின் பெண், அவரோடு அங்கேயே ஒன்றுபட்டு மறைந்தாள்.

## த₃ர்ஶனத்யாக₃மும் க்ருமிகண்ட₂மரணமும்

पूर्णार्यकूरेश्वरनेत्रहानिं श्रुत्वा तदा क्लिष्टतरो यतीशः।
निशम्य कूरेशमरोगमाशु चोलं तथा दुर्मृतमाप हर्षम्॥ १०२॥

102. பெரியநம்பியும், கூரத்தாழ்வானும், த₃ர்ஶனத்திற்காக (மதத்திற்காக) த₃ர்ஶனத்தை (கண்ணை) இழந்ததைக் கேள்விப்பட்டு மிக வருந்திய யதிராஜர், (பெரியநம்பி பரமபதமடைந்தபோதிலும்) கூரத்தாழ்வான் க்ஷேமமாயிருப்பதையும், சோழ அரசன் விரைவிலேயே (அஸஹ்யாபசாரப₂லமாகக் கழுத்தில் புழுத்து) து₃ர்மரணம் அடைந்ததையும் கேள்விப்பட்டு, (ஸ்ரீரங்க₃ச்செல்வத்திற்கு உபத்₃ரவம நீங்கியது காரணமாக) ஆனந்த₃மடைந்தார்.

## யது₃கி₃ரி யதிகி₃ரியானது

तीर्थं कल्याणमासीत्तदपि पुरवरं तच्च नारायणाख्यं
श्रीशस्सम्पत्कुमारो यतिनृपतिजयस्थानमासीत्ततस्तत्।
किंच श्रीमान् यतीन्द्रस्स्वपदगतजनश्रेयसे स्वीयमर्च्यं
रूपं प्रादाच्च तस्माद्यतिगिरिरिति तद्यादवाद्रेस्तु नाम॥ १०३॥

103. அதற்குப்பின்பே—கல்யாண தீர்த்த₂ம், பொருந்திய பெயர் பெற்றது. அந்த நக₃ரமும் திருநாராயணபுரமாயிற்று. அங்குள்ள ஶ்ரிய:பதியும் ஸம்பத்குமாரர் (செல்வப்பிள்ளை) ஆனார். யதிராஜரின் ஜயஸ்த₂ானமாக ஆயிற்று அவ்வூர். மேலும், ஸ்ரீமானான யதிராஜர் தமது திருவடிகளை ஆஶ்ரயித்த ஜனங்களின் ஹிதத்திற்காக தனது அர்ச்சாமூர்த்தியை (மூலவரை) அவர்களுக்கு அளித்தார். அதனால் அந்த யாத₃வாத்₃ரி யதிகி₃ரி என்றும் பெயர் பெற்றது.

## ஸ்ரீரங்க₃த்தை அடைதல்

नत्वा सम्पत्कुमारं यदुगिरिकमलायुक्तनारायणं तं
शिष्यानादिश्य तत्राप्यथ कतिपयसच्छिष्ययुक्तो यतीशः।

गत्वा श्रीरङ्गनाथं ससलिलनयनः प्राणमत्तं प्रहृष्ट-
स्तत्रत्यास्तं तदोचुश्शठमथनगिरामुत्सवं सन्निरुद्धम् ॥ १०४ ॥

104. செல்வப்பிள்ளையையும், யது₃கி₃ரிநாச்சியாரோடு கூடிய திருநாரணனையும் வணங்கி, அங்குள்ள சிஷ்யர்களை (திருநாரணனை ரக்ஷிக்கும்படி) நியமித்துவிட்டு, சில அந்தரங்க₃ஶிஷ்யர்களோடு கூடிய யதிராஜர் ஸ்ரீரங்கத்திற்குச் சென்று மிகவுகந்து, ஸ்ரீரங்க₃ நாத₂னை ஆனந்த₃க் கண்ணீரோடு வணங்கினர். அப்போது அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் நம்மாழ்வாரின் அருளிச்செயல்களுக்கான திருவத்₄ யயநோத்ஸவம் (ஆழ்வார்திருநகரியிலிருந்து ஆழ்வார் எழுந்தருள இயலாமையால்) தடைபட்டுவிட்டது என்று அவரிடம் கூறினர்.

## ஆழ்வார்கள் ப்ரதிஷ்டை₂யும், அத்₄யயநோத்ஸவமும்

तत्र श्रीमान् यतीशः कमपि शठरिपुं सम्प्रतिष्ठाप्य तेन
श्रीरङ्गाधीश्वरस्याध्ययनमहमहर्विंशतिं कारयित्वा ।
पश्चात्कैश्चित्प्रबन्धैस्स्वविषयककथं तं प्रबन्धं मिलित्वा
रङ्गं संश्राव्य चक्रे स तदितरमहासूरिगोदाप्रतिष्ठाम् ॥ १०५ ॥

105. அந்த ஸ்ரீரங்க₃த்திலேயே ஸ்ரீமானான யதிராஜர் நம்மாழ்வார் விக்₃ரஹமொன்றை ப்ரதிஷ்டை செய்வித்து, அவரைக்கொண்டு ஸ்ரீரங்க₃ ராஜனுக்கு இருபது நாள் அத்₄யயனோத்ஸவத்தைச் செய்வித்து, பிற்காலத்தில் மற்ற ஆழ்வார்களின் பிரப₃ந்த₄ங்களையும், தன் விஷயமான இராமாநுச நூற்றந்தாதியையும் சேர்த்துத் திருவரங்க₃ன் செவி சாத்தும்படி செய்து, அந்த மற்றையாழ்வார்களுக்கும், ஆண்டா ளுக்கும் விக்₃ரஹப்ரதிஷ்டை₂யும் செய்து வைத்தார்.

## கோயிலண்ணரானது

तद्वद्दिव्यस्थलेष्वप्यतिमहिमसु तत्सूरिगोदाप्रतिष्ठां
कृत्वा सर्वत्र तं चाध्ययनमहमपि प्राज्यहय्यङ्गवीनम् ।

प्राज्यक्षीरोद्गुडान्नं वृषभगिरिपतिप्रीणनार्थं निवेद्य
श्रीमान् रामानुजार्यः कृतबहुमतिरप्यास गोदाकटाक्षैः ॥ १०६ ॥

106. அதுபோலவே மிகச்சிறப்புற்ற தி₃வ்யதே₃ஶங்கள் அனைத்திலும், ஆழ்வார்களுடையவும், ஆண்டாளுடையவும் விக்₃ரஹங்களை ப்ரதிஷ்டை₂ செய்வித்து, அத்₄யயநோத்ஸவமும் நடக்கும்படி செய்து, (ஆண்டாள் பாரித்தபடியே) நூறுதடாவில் வெண்ணெயும், நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் திருமாலிருஞ்சோலை அழகர் உகக்கும்படி ஸமர்ப்பித்து,யதிராஜர் ஆண்டாளின் கடாக்ஷத்தாலே 'கோயிலண்ணர்' என்று அழைக்கப்பெறும் ஸந்மானத்தைப் பெற்ருர்.

## கோவிந்தராஜ ப்ரதிஷ்டை

नीतं गोविन्दराजं रहसि निजतलाद्वेङ्कटाद्रेस्तु सानौ
संस्थाप्याचार्यशठारिप्रभृतिगुरुततेश्शिष्यसङ्घैर्यतीशः ।
गत्वा रङ्गं स पश्चादितरमतजनान् स्वाश्रयानेव कुर्वन्
शिष्यान् कांश्चिद्विभज्य क्रमत इह तदा विज्वरस्सन्तुतोष ॥ १०७ ॥

107. (க்ருமிகண்ட₂னால் இடிக்கப்பட்ட) தில்லைத் திருச்சித்திரகூடத்திலிருந்து ரஹஸ்யமாக எடுத்துச்செல்லப்பட்ட கோ₃விந்த₃ர்ாஜப்பெருமாளின் உத்ஸவமூர்த்தியை வேங்கடமலை அடிவாரத்திலே ப்ரதிஷ்டை₂செய்து, நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களையும் ப்ரதிஷ்டை₂செய்து, ஶிஷ்யஸமூஹங்களோடு கூடிய யதிராஜர் திருவரங்க₃த்திற்குத் திரும்பிச்சென்றபின், மற்ற மதங்களைப்பற்றியிருந்த ஜனங்களைத்தனது அடியார்களாக்கிக்கொண்டு, சிஷ்யர்களுக்கு முறைப்படி ஒவ்வொரு கைங்கர்யத்தைப் பிரித்துக்கொடுத்து, கவலைநீங்கப்பெற்றவராய் இன்புற்ருர்.

## ஸிம்ஹாஸநாதி₄பதிகளை நியமித்தல்

पीठाधीशांश्च कांश्चिच्चतुरधिगणनायुक्तसप्तत्यभिख्यान्,
तत्राप्यग्र्यांश्च कांश्चिच्चतुर इह तथा भाष्यसिंहासनेशान् ।

तत्र ज्ञानात्मजं तं तदुभयनिगमान्ताख्यभाष्येश्वरं च
श्रीमान् रामानुजार्यो यतिनृपतिमहादेशिकेन्द्रश्चकार ॥ १०८ ॥

108. எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளையும், அவரிலும் முக்கியமானவராக நால்வரை ஸ்ரீபா₄ஷ்ய ஸிம்ஹாஸநாதி₄பதிகளாவும், அந்நால்வரிலும், தனது ஜ்ஞாநபுத்ரரான பிள்ளானை உப₄யவேதா₃ந்த பா₄ஷ்ய ஸிம்ஹாஸநாதி₄பதியாகவும், யதிகளுக்குச் சக்ரவர்த்தியான ராமானுஜாசார்யர் நியமித்தருளினர்.

## ஶிஷ்யஸம்ருத்₃தி₄

सप्तत्या तैश्चतुर्भिर्यतिभिरपि तथा सप्तशत्याद्भुतश्रीः
अन्यैरेकान्तिभिश्च द्वियुतदशमितैस्तैस्सहस्रैस्समेतः ।
ज्येष्ठान् कूरेशमुख्याननुजमपि तथा चौरसं ज्ञानपुत्रं
वीक्ष्य व्याप्यत्ववाहान् यतिनृपतिरपि प्रेक्ष्य सम्मोदमाप ॥ १०९ ॥

109. அந்த எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளோடும், எழுநூறு ஸந்யாஸிகளோடும், பன்னீராயிரம் பரமைகாந்திகளோடும் ஆஶ்சர்யமான ஶிஷ்யஸம்ருத்₃தி₄பெற்றவராய் எழுந்தருளியிருந்த யதிராஜர், பெரியவர்களான கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலானோர், தம்பியான எம்பார், தனது ஜ்ஞானபுத்ரரான பிள்ளான் ஆகிய அனைவரையும் கடாக்ஷித்து, மற்ற சிஷ்யர்களையும் அவர்களுடைய அபி₄மானத்தில் ஒதுங்கியிருக்கும்படி கடாக்ஷித்து மிகவும் உகந்தார்.

## மூன்று திருமேனிகளை அளித்தல்

शास्त्राचारैकवश्यैर्विदितसुचरितैश्शिष्यवर्गैस्समेतः
कैश्चित्संप्रार्थितस्सन् यतिपतिरपि चालिङ्ग्य सद्विग्रहांस्त्रीन् ।

श्रीरङ्गे भूतपुर्यामपि च यदुगिरौ स्थाप्यमेतत्त्रयं चे-
त्युक्त्वा दत्त्वा च तेभ्यो जगदखिलमवन् मां कटाक्षैस्स पायात्॥ ११०॥

110. ஶாஸ்த்ரங்களில் சொன்ன ஆசாரத்தின்படியே நடப்பவர்களாய், நல்லொழுக்கமுடையவர்கள் என்று புகழ்பெற்றவர்களான ஶிஷ்யஸமூஹங்களோடு கூடிய யதிராஜர், சில சிஷ்யர்களால் பிரார்த்தி₂க்கப்பட்டவராய், (உத்ஸவமூர்த்திகளான) தனது அர்ச்சா விக்₃ரஹங்கள் மூன்றைத் தழுவி, அவற்றை முறையே ஸ்ரீரங்க₃த்திலும், ஸ்ரீபெரும்பூதூரிலும், திருநாராயணபுரத்திலும் ப்ரதிஷ்டை₂ செய்யவேணடியவை என்று சொல்லி அவர்களுக்கு அளித்து, உலகனைத்தையும் ரக்ஷித்துவருமவராய், தமது கடாக்ஷத்தாலே அடியேனையும் ரக்ஷிக்கக்கடவாராக.

## கலிகோலாஹலத்தைத் தவிர்த்தல்

सर्वत्रोत्सार्य भूम्यां व्यपगतवसतिं मामकार्षीर्यतस्त्वं
तस्मात्संप्राप्तकाले मतमपि भवतः क्षोभयिष्ये शपेयम्।
श्रुत्वेत्युक्तिं कलेरप्यथ यतिनृपतिः श्रीशमाद्यं प्रपन्नो
जीयादव्याहतं मे मतमिति च वदन् पालयेन्मां कटाक्षैः॥ १११॥

111. "இப்பார்முழுவதிலிருந்தும் என்னை விரட்டி, நான் தங்குவதற்கு இடமில்லாமல் நீர் செய்ததால், நான் எனக்குச் சமயம் வாய்க்கும்போது, உமது மதத்தையும் கலக்குவேன் என்று ஆணையிடுகிறேன்" என்று கலிபுருஷன் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ஆதி₃புருஷனை ஶ்ரிய:பதியை ஶரணடைந்து, 'எனது மதம் தடையற்றதாய் வாழக்கடவது' என்று பிரார்த்தி₂த்த யதிராஜர் என்னைத் தமது கடாக்ஷங்களால் ரக்ஷிக்கக்கடவர்.

## யதிராஜருக்குப் பல்லாண்டு

जीयाच्छ्रीयामुनार्यैस्तदुपचितमहापूर्णगोष्ठीपुरोद्य-
त्पूर्णश्रीशैलपूर्णैरपि महिमनिधी रङ्गमालाधरार्यैः ।
प्राचीनाराधनं तं वरदमपि हयग्रीवमाप्तं च वाण्या
दत्वा ज्ञानात्मजाय त्रिभुवनतिलकीभूतकीर्तिर्यतीशः ॥ ११२ ॥

112. (தனது அந்திமதசையில்) குலதெய்வமான தேவப் பெருமாளையும், ஸரஸ்வதி அளித்த ஹயக்ரீவனையும், ஜ்ஞாநபுத்ரரான பிள்ளானுக்கு அளித்து, மூவுலகிலும் சிறப்புற்ற புகழையுடைய மஹா ப்ரப₄ாவரான யதிராஜர், ஆளவந்தார், அவரது சிஷ்யர்களான பெரிய நம்பி, பெருமைபெற்ற திருக்கோட்டியூர்நம்பி, திருமலைநம்பி, திருவரங்கப்பெருமாளரையர், திருமாலையாண்டான் ஆகிய ஆசார்யர்களோடு என்றும் வெற்றிபெறுவாராக.

## நான் (வடுகநம்பி) பெற்ற பேறு

कांश्चित्कस्मिंश्चिदर्थे प्रतिनियततया सन्नियोज्यान्तरङ्गान्
तत्र क्षीरार्थकृत्ये प्रतिनियतमहो दासमप्यत्यनर्हम् ।
कुर्वन् श्रीमान् यतीशस्स्वपदविनततद्दासदासानुदासं
मामप्यत्यन्तभक्तं स्वहितमिव सदा गोपयन् सोऽपि जीयात् ॥ ११३ ॥

113. தனது அந்தரங்கசிஷ்யர்களில் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு கைங்கர்யத்தில் நியமித்த ஸ்ரீமானை யதிராஜர், மிகவும் தகுதியற்ற என்னையும் தமக்குப் பால் காய்ச்சும் கைங்கர்யத்தில் நியமித்தருளினர்; இது என்ன ஆச்சரியம்! அத்துடன், தன்னடியார்க்கு அடியார்க்கு அடியார்க்கு அடியவனாகவும், மிகுந்த அன்புடையவனாகவும், தனக்கு நல்லது செய்பவனாகவும் கொண்டு என்னையும் ரக்ஷிக்கிறவரான அவர் பல்லாண்டு வாழ்க!